# மரபாளர்

பயணம்: 3 பதிவு: 2


**“அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.” (குறள் 611)**

நம்மால் முடியுமா என்று மனத்தளர்ச்சி அடையாமல், முடியும் என்ற நம்பிக்கையுடன் முயற்சி செய்தால் அதுவே பெரிய வலிமையாக அமையும்.

அனைவருக்கும் வணக்கம்,

மரபுசார் வரலாறு மீது ஆர்வமுள்ள வரலாற்று ஆய்வாளர்கள், ஆர்வலர்கள் மற்றும் மாணவர்கள் தங்கள் வரலாற்றுத் தேடலைப் பதிவு செய்யும் களமாக நமது ஹெரிட்டேஜர் இதழ் திகழ்ந்து வந்துள்ளது. இனி ஹெரிட்டேஜர் “மரபாளர்” என்ற பெயரில் மின்னிதழாக வெளிவருகின்றது. மரபாளர் இதழின் நோக்கம் மக்களிடையே உள்ள பண்பாட்டுத் தொடர்புகள், வரலாற்று அடையாளங்கள், சடங்குகள், மரபுசார் அறிவு, பதியப்படாத வரலாற்றுத் தகவல்களைத் திரட்டி அளிப்பதோடு, இலக்கியம் மற்றும் வரலாற்றை மீண்டும் வாசிக்கும் தளமாக இது இருக்க வேண்டும் என்பதே.

இவ்விதழுக்கு ஆய்வாளர்கள், ஆய்வு மாணவர்கள் முதல், ஆர்வலர்கள், மரபுசார் அறிவுடையோர், கல்வியாளர்கள், மாணவர்கள் என பங்களிக்க விருப்பமுள்ளோர், பின் வரும் தலைப்புகளில் தங்களின் கட்டுரைகளைத் தகுந்த மேற்கோள்களுடன் எங்களுக்கு அனுப்பி வைக்கவும்.

1. தொல்லியல்,
2. கல்வெட்டு,
3. மரபு பயணங்கள்,
4. நிகழ்வுகள்,
5. மரபுசார் தொழில்கள்,
6. கலைஞர்கள்,
7. பழைய கட்டுமானங்கள்
8. கோவில்,
9. இலக்கியம்,
10. வரலாற்றில் முக்கியம் வாய்ந்த இடங்கள், மனிதர்கள், நாட்கள்,
11. திணைக் குடிகள்,
12. பழங்கால அரசியல்,
13. பழங்கால வணிகம்,
14. சமூக இனக்குழு வரலாறு,
15. நாட்டார் வழக்காற்றியல்,
16. பன்னாட்டு தமிழர் வரலாறு,
17. தென்னக வரலாறு,
18. ஊர் வரலாறு,
19. தொழில் நுட்ப வரலாறு,
20. பழம் பொருட்கள் வரலாறு,
21. பன்னாட்டு வரலாறு,
22. புகைப்படத் தொகுப்பு
23. ஆய்வு நூல் அறிமுகம்
24. சுற்றுலா தளங்கள்



அட்டைப் படம்: களம்பூரான் கோட்டை

இதழ் ஒவ்வொரு மாதமும் முதல் நாள் வெளிவரும். உங்கள் கட்டுரைகளை ஒவ்வொரு மாதமும் 15 தேதிக்குள் அனுப்பவும்.

நன்றியும் அன்புடன்
இராஜசேகர் பாண்டுரங்கன்

# களம்பூரான் கோட்டை



A.T மோகன்,
சேலம்

என்னுடைய முப்பத்து எட்டு ஆண்டு கனவு, எனது நண்பர் வேலூர் சரவணன் அவர்கள் உதவியால் நிறைவேறியது. களம்பூரான் கோட்டை அடிவாரத்தில் வழி காட்டி விவரங்களைப் பகிர்ந்து வழி காட்டிய களம்பூரான் கொட்டாய் கிராமத்து அர்ஜுனன் , நலம் விசாரித்த கிராம மக்கள் எனப் பல வியப்புகள் எங்களுக்காகக் காத்திருந்தது.

கோட்டை ஏற்றத்தில் முதலில் மஞ்சம்மா கோயில், அடுத்து கன்னி கோயில், சந்திரி பாறை , கருப்பு பாறை, வழுக்கு பாறை, மூன்று நிலைகள் கொண்ட கோட்டை என எங்கள் பயணம் பரபரப்பு நிறைந்ததாக இருந்தது.

இந்தக் கோட்டைக்குப் பல முறை சென்று வந்த சரவணன் ராஜா அவர்கள் இனி அவர் நடையில் கோட்டையைப் பற்றி பகிர்ந்து கொள்கிறார்.

திருவண்ணாமலை நெடுஞ்சாலையில் கணியம்பாடி



வழியாக தெற்கில் சுமார் 15 கிலோமீட்டர் தொலைவில்,ஜவ்வாது மலைத்தொடர் அடிவாரத்தில் உள்ளது சோழவரம் என்கிற அழகிய கிராமம். ஊர் எல்லையில் வயல்வெளிகளைக் கடந்து சென்றால் அங்கே உள்ளது சோளீஸ்வரர் என அழைக்கப்படும் சிவாலயம்.

மிகவும் தொன்மையானது. இவ்வாலயத்தில் இந்த ஊர் வரலாற்றைக் குறிக்கும் பல சிறப்பான கல்வெட்டுகளைக் கொண்டுள்ளது.

பல்லவர்கள் ஆட்சிக்கு உட்பட்ட தொண்டை மண்டலத்தில் உள்ள சோழவரம்,பல்லவ மன்னர் விக்கிரமவர்மன் காலத்திய கல்வெட்டு இவ்வுரை காட்டுத்தும்பூர் எனக் குறிப்பிடுகிறது. ஆட்சியாண்டு அழிந்த நிலையில் உள்ள முதலாம் பராந்தகன் கல்வெட்டில் இறைவன் பெயர் காட்டுத்தும்பூர் நந்திகம்பீஸ்வரத்து பெருமான் என உள்ளது. முதலாம் இராஜராஜர் 27வது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் உய்யக் கொண்ட சோழபுரம் என்று அழைக்கப்பட்டுள்ளது. முதலாம் குலோத்துங்கன் 32வது ஆட்சியாண்டு கல்வெட்டு இறைவன் திருநாமம் ராஜராஜிஸ்வரமுடையார் என்று உள்ளது. அனைத்துக் கல்வெட்டுகளும் விளக்கேற்ற அளித்த கொடை செய்திகளைக் காண முடிகிறது.

தொன்மையான கல்வெட்டுகள் நிறைந்த இவ்வாலயத்தில் ஏதோ ஒரு தூண் கல்வெட்டில் ‘கூர்ம மலை பொக்கிஷ’ என்ற வரிகளை ஏற்கனவே 10





ஆண்டுகளுக்கு முன்பே கேட்டறிந்த நண்பர் அஷ்ரப் அலி என்னை அழைத்துச் சென்றபோது ஆலயம் பெருமளவில் மாற்றப்பட்டு இருப்பதைக் குறிப்பிட்டார். கும்பாபிஷேகத்துக்கு ஆலயம் தயாராகிக் கொண்டிருந்தது.

அந்தக் கல்வெட்டு தூண்களைத் தேடினால் அந்தோ அனைத்தும் படிகளாக மாற்றப்பட்டு பைஞ்சுதை பூசப்பட்டு இருந்தது. சிதறிக்கிடந்த தூண்களில் பல கல்வெட்டுகள் சிதைந்து காணப்பட்டன. கூர்ம மலை என்ற சொல் உள்ள கல்வெட்டைத் தேடித் தேடி சோர்ந்துபோய் மூடிய கருவறையில் உள்ள சோழிஸ்வரரை வணங்கி விட்டுத் திரும்பிய வேளையில் தூரத்தில் தெரிந்த மலையின் உச்சியில் இருந்த பாறை வடிவம் கூர்மம் (ஆமை) வடிவத்தில் காணப்பட்டது.

சுமார் 10 கிலோமீட்டர் தொலைவில் உள்ள இந்த மலை அடிவாரம் வரை சென்று பார்த்தால் இந்த உருவ அமைப்பு தெரியவில்லை.ஆனால் தூரத்திலுள்ள ஆலய கருவறையிலிருந்து பார்த்தால் ஆமை வடிவம் தெளிவாகத் தெரிவது ஆச்சரியம் தான்.

களம்பூரான் கோட்டையின் ஆரம்ப புள்ளி இந்த ஆலயத்திலிருந்து தான் தொடங்குகிறது. சோழவரம் ஆலயக் கருவறையிலிருந்து வெகு தொலைவில் தெரிந்த மலைமேல் ஓர் ஆமை அமர்ந்திருக்கும் தோற்றம் இயற்கையாக அமைந்துள்ளது.

தூய தமிழில் கூர்மம் என்றால் ஆமை எனப் பொருள். இங்கே கல்வெட்டில் குறிப்பிட்ட கூர்ம மலை அதுவாகத்தான் இருக்கும் என அதை நோக்கி எங்கள் இரு சக்கர வாகனத்தில் பயணத்தைத் தொடர்ந்தோம் .

வேலூரிலிருந்து திருவண்ணாமலை செல்லும் பிரதான சாலையில் பலராமன் பண்ணை என அழைக்கப்படும் நிறுத்தம் அருகே இடதுபுறம் செல்லும் சாலையில் சிறிது தூரம் சுமார் இரண்டு கிலோமீட்டர் சென்றபின் அந்தச் சாலை ஒற்றையடிப் பாதையாகக் குறுகிப் போகின்றது. கல்லும் முள்ளும் நிறைந்த கடினமான பாதை, மேலும் சுமார் மூன்று கிலோமீட்டர் அடர்ந்த வனம் கொண்ட மலை அடிவாரம் வரை சென்றால் ஆட்கள் இன்றி நிசப்தமாகக் காணப்படுகிறது.

இயற்கை அமைப்பில் வேலூரைச் சுற்றி கண்களுக்கு எட்டிய தூரம் மலைகள் சூழ்ந்து காணப்படும்.



குறிப்பாகப் பல மலைகளில் இரும்புத்தாது நிறைந்து காணப்படுகின்றன, அவைகள் சூரிய வெப்பத்தை உள்வாங்கி வெளியிடுவதால் இங்கே அதிகபட்ச வெப்பம் ஏற்படுகிறது. மேலும் மலைகளில் பாறைகளாகவே அமைந்திருப்பதால் மரங்கள் வளர வாய்ப்பு இல்லாமல் இருக்கிறது. இந்த மலையிலிருந்து இரும்பைத் தவிர தங்கம், வெள்ளி, தாமிரத் தாதுக்கள் நிறைந்துகாணப்படுகின்றன. அங்கே இருக்கும் பெரும்பான்மையான பாறைகள் பளபளப்பாகவும் கனிமங்கள் கொடி போலப் படர்ந்தது காணக்கிடைக்கின்றன. கனிமவளம் அதிகம் உள்ள இடமாக கூர்ம மலையைக் கருதலாம்.

கூர்ம மலையிலிருந்து எடுக்கப்பட்ட கனிமங்கள் இந்த மலைக்கு எதிரில் சுமார் 10 கிலோ மீட்டர் தொலையில் கணியம்பாடி கணவாய் என்கின்ற அடர்ந்த காட்டுப்பகுதி உள்ளே ஒரு குறிப்பிட்ட இடத்தில் வைத்து கனிமங்களைப் பிரித்துள்ளனர்.இந்த குறிப்பிட்ட இடம் மட்டும் சுற்றிலும் பாதுகாப்பு சுவர் அமைந்துள்ளனர்.

தாதுமணல் பிரித்தெடுக்க ஒரு சுத்திகரிப்பு ஆலை இருந்த இடிபாடுகள் காணப்படுகின்றன. இயற்கையான ஓடை அமைப்பும் ,தாதுமணலை அரித்துக்அதிலிருந்து கனிமங்களைப் பிரித்தெடுக்கும் விசித்திரமான கட்டமைப்பைக் கொண்டுள்ளது,

மேலும் ஒரு புறம் அறித்தமணல் ஒரு மலை போல் குவிந்துகாணப்படுகிறது, இவை எல்லாமே இன்று இடிந்தநிலையிலுள்ளது.உள் நுழையும் வாயிலில் மணிகூண்டுஒன்று மணி இல்லாமல் தூண்களை மட்டும் காணலாம். அருகே ஒரு கன்னி கோயில் அமைந்திருப்பதால் பொதுமக்கள் உள்ளே நுழையவே அஞ்சுகின்றனர்.

‘கூர்ம மலை பொக்கிஷ’ கல்வெட்டைத் தேடி சோழவரம் சென்று, பின்னர் அங்கிருந்து தெரிந்த கூர்ம மலை அடிவாரம் வரை சென்று, அங்குள்ள கனிம வளத்தைக் கண்டபின் எதிர்புறமாகச் சில மைல் தூரம் இயற்கையான ஓடை அருகே அமைந்த கனிம வளத்தைப் பிரித்தெடுக்கும் இடிந்த நிலையில் இருந்த ஆலை கண்ணமங்கலக் கணவாயில் பார்த்தபின் இந்த களம்பூரான் கோட்டையை நோக்கி பயணித்தோம்.

நண்பர் அஸ்ரப் பலமுறை இக்கோட்டைக் காண மலையேறி சென்றிருக்கிறார், 400 ஆண்டுகளுக்கு முன்பு விஜயநகரக் காலத்தில் இந்தக் கோட்டை ஒரு காவல் கோபுரமாகவும், நாணயங்களை அச்சடிக்கப் பயன்படுத்திய கோட்டை என்று கூறியதால், திரில்லிங்கான ஒரு வரலாற்றுக் கோட்டையைக் காணத் தயாரானேன்.

இந்தக் கோட்டை அமைந்திருக்கும் உயர்ந்த மலை உள்ள கிராமத்தின் பெயர் களம்பூர் கொட்டாய், வேலூரிலிருந்து ஆரணி செல்லும் சாலையில் கண்ணமங்கலம் செல்லும் பாதையில் திரும்பாமல் சிறிது நேராகச் சென்று, இடதுபுறம் உள்ள சாலையில் சில பார்லாங் தூரத்தில் அமைந்துள்ளது. இரண்டுதெருக்களும்



சுமார் 40 வீடுகள் மட்டுமே உள்ளன. இதைக் கடந்தபின் விளைநிலங்களும் தென்னை, மா, தோப்புகள் அடர்ந்து காணப்படுகின்றன. சுமார் அரை மைல் தோப்பின் வழியாக மலை அடிவாரம் வரை சென்றால் மரங்களால் மூடப்பட்ட கல் தூண்கள் நிறைந்த மண்டபம் உள்ளது. காவல் மண்டபமாக இருந்திருக்கலாம். எல்லாத் தூண்களிலும் நாயக்கர் கால சிற்பங்கள் அழகாக வடிக்கப்பட்டுள்ளன. இங்கிருந்து மலை உச்சியில் உள்ள கோட்டைச் சுவர்கள் தெளிவாகத் தெரிகின்றன.

கோட்டை மேலேறச் சரிவான மலைகள் அமைந்த பகுதி கிராமத்தின் பக்கம் தான் உள்ளது. மலையின் மறுபுறம் ஒரே பெரிய பிரம்மாண்டமான பாறை 600 மீட்டர் செங்குத்தாக அமைந்துள்ளது. ஏறவே முடியாத பாதை அது. இரண்டு பேர் மட்டுமே கோட்டைக்குச் செல்லாமல் ஒரு குழுவாக மலையேற்றம் செய்வதும், உள்ளூர் மக்களின் வழி காட்டுதலும் மிகவும் அவசியம்.

இந்தமலை கோட்டைமலை என்று அழைக்கப்படுகிறது. இது புகழ் பெற்ற வேலூர் கோட்டைக்குத் தெற்கே 16 கி.மீ தொலைவில் உள்ளது. இந்தச் சுவாரஸ்யமான இடத்தைப் பற்றி மிகக்குறைந்த தகவல்களே கிடைக்கின்றன.
கோட்டை பலநூற்றாண்டுகள் பழமையானது என்று கிரா மபூர்வீகவாசிகள்கூறுகிறார்கள்.

ஒரு நாள் நீண்ட மலையேற்றப் பயணத்திற்கு இந்த கோட்டை ஒரு நல்ல தளம்.கோட்டையை ஏற ஒரு பக்கமே வழி இருக்கிறது. இந்தக்கோட்டையில் ஏறத் தேவையான சராசரி உடற்தகுதியை விடச் சற்று அதிகம் தேவை. கோட்டை முழுவதும் முட்புதர்களால் சூழப்பட்டுள்ளது, மலையேற்றப் பிரியர்களுக்கு சவாலான ஓர் இடம் இந்தக் கோட்டை மலை.

விஜயநகர இராஜ்ஜியத்தின் காவல் கோபுரமாகவும் நாணயங்கள் அச்சிடப் பயன்படுத்திய இடமாக இக் கோட்டை கூறப்படுகின்றது. காலை 11 மணிக்கு 5 பேர் கொண்ட குழுவாக பயணித்த நாங்கள் அடிவார காவல் மண்டபத்தில் ஆற்காடு மக்கன் பேடா சாப்பிட்டு முடிந்தபின், மூன்றாவது மலையிருந்து கோட்டையை நோக்கி ஏற ஆரம்பித்தோம்.

மலையிலிருந்து நீர் இறங்கும் பாதையில் ஏற தொடங்கினோம், மேலே செல்லப் பாதையோ அல்லது அங்குச் செல்ல எந்த அடையாளத்தையோ காணவில்லை, ஒருஅரை மணி நேரநடைக்குப் பிறகு நாங்கள் வழியைத் தவறவிட்டதைக் கண்டோம், நாங்கள் வேறு வழியைத் தேர்ந்தெடுத்து நோக்கிச் செல்ல ஆரம்பித்தோம் இரண்டாவது மலை வந்த பின்னர் மீண்டும் வழிதவற விட்டதைக் கண்டோம், நான்கு முறை அதே இடத்தை சுற்றி சுற்றி வந்தோம், கடைசியில் மருத்துவர் மோகன் குமார் ஒரு பாதையைக் காட்டினார், சிறிது நடை தூரத்தில் கோட்டைச்சுவர்களை மிக அருகில் காணமுடிந்தது, ஆனால் பெரிய சுவர்களுக்கு முன் இருண்ட புதர்களைக் காண முடிந்தது சுவரின் அருகே நெருங்கக் கூட முடியவில்லை. இங்கே வர இரண்டு மணி நேரம் ஆனது.



கோட்டையைச் சுற்றிலும் பெரிய சுவர்களால் சூழப்பட்டுள்ளது மற்றும் உள்ளே நுழைவதற்கு எந்த நுழைவாயிலும் இல்லை, வழக்கமாகக் கோட்டை நுழைவு கிழக்குத் திசையில் இருக்கும், ஆனால் இந்தக் கோட்டையில் அது தெற்கு நோக்கியும் காணப்படுகிறது,எதிர்பார்த்ததை விட அகலமானது அல்ல, அதன் சாளரம் *3 அடி x 2 அடி* மட்டுமே தெரிகிறது,மற்றும் அவை செங்குத்தான பாறைக்கு மேலே இருந்து, மறுபுறம் ஆழமான பள்ளத்தாக்கு.

சரியான வழிகாட்டல் மற்றும் முன்னெச்சரிக்கை இல்லாமல் ஏற மிகவும் ஆபத்தான இடம்,இரண்டு பேர் என்னை மேலே தூக்கினர், பின்னர் அவர் ஒரு மரத்தின் அருகே ஏறி அதில் இருந்து வழுவான கொடியை பற்றி,ஒருவர் பின் ஒருவராக நாங்கள் அதன் உதவியுடன் ஏறஆரம்பித்தோம், உடலை குறுக்கி அந்த சிறிய நுழைவாயிலுக்குள் நுழைந்ததும் புதிய பார்வையாளர்களை வரவேற்க அங்கே நிற்கும் ஒரு அனுமன் சிலை!

கோட்டையின் ஒரு பெரிய தலைவாசல் நீண்ட படிகளுடன் சற்று தொலைவில் காணமுடிந்தது. மூன்று அடியே உள்ள நுழைவாயில் வழியே நுழைந்து கோட்டைக்குள் சென்றால், தூரத்தில் தெரிகிறது பிரதான நுழைவாயில், சில படிகளோடு, கோட்டைச் சுவர்கள் முழுவதும் ஆல மர வேர்கள் படர்ந்துள்ளன.

தலைவாசலைக் கடந்தபின் 14 தூண்களோடு ஒரு சிறிய ஓய்வு மண்டபம் சிறு புடைப்பு சிற்பங்களோடு.,எதிரே ஒரு பெரிய சுனையில் பாசி படர்ந்த நீர் தேங்கியுள்ளது.சிறிய காவலர்கள் அறைகள், சுற்றிலும் மதில் சுவர், மேலே செல்ல படிகள் அங்கே மற்றொரு நுழைவு வாயில் காணப்படுகிறது.

மேலேறிச் சென்றால் அங்கேயும் சுற்றுச் சுவர்கள், சிறு அறைகள், ஒரு பிரம்மாண்ட படிக்கிணறு காணப்படுகிறது. இங்கிருக்கும் ஒரு அறை வழியாக தூரத்தில் கூர்ம மலையின் அழகு காட்சி தெரிகின்றது. கீழே இருந்து பொருள்களை மேலே ஏற்றும் அமைப்புடன் இங்கே காணப்படுகிறது.

மீண்டும் மேலே செல்லும் படிகள் மலை உச்சிக்கு வந்த பின் இங்கேயும் ஒரு பெரிய மண்டபம் பெரிய நுழைவாயில் உள்ளே கும்மிருட்டாக ஒளியே இல்லாமல். மேலே ஆங்கிலேயர் காலத்தில் செதுக்கிய இந்த மலையின் அளவு உடன், ஒரு பெரிய பாறை மரம் வளர்ந்து இரண்டாகப் பிளந்துள்ளது. இதுவே மலையின் உச்சிப் பகுதி. நான்கு புறமும் மலைகள்,வயல்கள், சூழ்ந்த



காட்சி தெளிவாகத் தெரிகிறது. வழக்கம்போல் புதையல் கதைகளால் கோட்டையில் ஆங்காங்கே குழி தோண்டித் தேடி அடையாளங்கள் காணப்படுகிறது, அங்கே இருந்த உலைக்களங்கள் உடைத்து நொறுக்கப்பட்ட நிலையில் உள்ளன.

நமது பண்டைய கலாச்சாரம் மற்றும் பாரம்பரிய பெருமைபலஇருந்த போதிலும், வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த நினைவுச் சின்னங்கள் வீணர்களால் அழிக்கப்பட்டு,மெதுவாக நம் கண்முன்னே மறைந்து விடுவதற்கு இந்த மலை மேல் உள்ள கோட்டையும் உதாரணமாகிப் போகின்றது. இவையெல்லாம் நம் பாரம்பரியப் பாதுகாப்பு சின்னங்கள் பட்டியலில் வராதா?

தொடர்ந்து பொறுமையாக வாசித்தமைக்கு நன்றி முற்றும் என முடித்து விடாத அளவு அங்கே தொல்லியல் சார்ந்த பழமை தடயங்கள் உள்ளன. நான் கூறியவை ஒரு சில மட்டுமே, எல்லா இடத்து புகைப்படங்களையும் எடுக்க முடியவில்லை பயணக் களைப்பினால்.

இன்றும் அந்தப் பக்கம் செல்லவே அஞ்சும் மக்கள், பல நூற்றாண்டுகளாக மக்கள் பயத்துடன் வணங்கும் மலை அடிவார கன்னி கோயில் அமைதியாக உள்ளது. இன்னமும் பார்த்து, ஆராய்ந்து எழுதப் பல இக்கோட்டையில் உண்டு. மேலே உச்சியில் கண்ட சிகரமும், கீழே வந்து கண்ட அந்த ஒரே பாறையின் பிரமாண்டமும் வியக்க வைக்கிறது எப்படி இந்த மூன்றடுக்கு கோட்டை இவ்வுயரத்தில் அமைத்திருப்பார்கள் என்று. வாய்ப்புள்ளவர்கள் உள்ளூர் மக்கள் துணையுடன் தகுந்த பாதுகாப்புடன் ஒரு முறை சென்று பார்க்கலாம்..

# வணிகத்தில் தழைத்த கொடுமணல்

## இலக்கியத் தரவுகளும் தொல்லியல் ஆதாரங்களும்

ஸ்டீபன் முடியரசு



தமிழக அகழாய்வுத் தளங்களில் முக்கிய இடத்தைப் பெறும் தொல்லியல் அகழாய்வுத் தளம் கொடுமணல் ஆகும். அதிக அளவிலான தமிழி எழுத்துகள் கொண்ட பானை ஓடுகள் கண்டறியப்பட்ட இடமும் இதுவே ஆகும்.

பெருங்கல் சின்னங்களை உடைய ஈமக்காடு மற்றும் தொழிற்கூடங்களை உடைய தளமாகவும் அடையாளம் காணப்பட்ட பகுதி இதுவாகும். முதலில் இலக்கியத் தரவுகளைக் காண்போம்.

சங்க இலக்கியத்தில் கொடுமணம் என்று குறிப்பிடப்படும் இடம் ஆகும்.

'கொடுமணம் பட்ட வினைமாண் நன்கலம்'
- பதிற்றுப்பத்து - 67

'கொடுமணம் பட்ட வினைமாண் அருங்கலம்'
-பதிற்றுப்பத்து - 74

கபிலரும், அரிசில் கிழாரும் மட்கலன்கள், அணிகலன்கள் செய்யப்பட்ட சிறப்பான இடமே கொடுமணம் என்று இயம்புகின்றனர்.

சொல்லாய்வு:

கொடு என்பதற்கு தா, கொடுமை என்கிற பொருள்களையே தற்போது அறிகிறோம். இன்னொரு முக்கியப் பொருளை மறந்துவிட்டோம்.

கொடுங்கோல் - வளைந்துபோன ஆட்சி, தீய ஆட்சி
கொடுமரம் - வளைந்த மரம், ஏணி
கொடுங்குழை - வளைந்த காதணி
கொடுவாள் - வளைந்த வாள், அரிவாள்
போன்ற சொற்களைக் கவனித்தால் கொடு என்பது வளைந்த என்கிற பொருளை அறியலாம். மாற்றமடைந்த எனவும் கொள்ளலாம்.

(உ-ம்: கொடுந்தமிழ், கொடும்பறை)



படம்: A.T மோகன்

மணம்- திருமணம், நறுநாற்றம் என்றே தற்போதைய பொருள். முன்னர் கூட்டம், கூடுகை, மதிப்பு, நன்னிலை எனவும் பொருளுண்டு.

ஒருவழியில் ஆய்ந்தால் கொடுமணம் என்பது அரசனின் கொடுமையான பாதுகாப்புக்கு உட்பட்ட கூடுகை (பகுதி) எனலாம். மற்றொரு விதமாக ஆய்ந்தால் ''மணி'' மற்றும் அணிகலன்கள் பெருமளவு உற்பத்தி ஆதல் பொருட்டு இவ்விடம் மணம் என்கிற பண்புப் பெயரை அடைந்திருக்கலாம்.

உ-ம் : கழனி- கழனம்

பணி புரியக் கிடைப்பதே பணம் என்பதையும் நோக்குக.ஆக மணிகள், மணிகளாலான அணிகள் செய்த இடம் மணம் என்றாலும் தகுமன்றோ?

கொடு - வளைந்த
மணி - மணிகளான முத்து, பவளம், வைர வைடூரியமும் இவற்றாலான அணிகலன்களும் எனக் கொண்டால்,

வளைந்த அணிகளை உருவாக்கும் ஊரே கொடுமணம் என்பது என் சொல்லாய்வின் முடிவாகும்.

கொடு மணி- வளைந்த அணிகலன்

(தற்போதும் கைவளை, வளையல் ஆகியன பயன்பாட்டில் உண்டு)

கொடுமணம்- அணிகலன்கள் உருவான இடம்.



படம்: A.T. மோகன்



படம்: *A.T* மோகன்

**தொல்லியல் தரவுகள்:**

*கார்பன் பகுப்பாய்வு 2500 ஆண்டுகளுக்கு முற்பட்டது எனத் தெரிவிக்கும் பகுதியே கொடுமணல் ஆகும்.*

*பெருங்கற்காலச் சின்னம் MEG-1 அகழ்வாய்வின் போது அதில் காணப்பட்ட பகுதிகள்:*

*1. முதன்மைக் குழி*
*2. வாயில் பகுதி*
*3. துணைக் குழிகள்*
*4. தாழி*
*5. தாங்கு சுவர்- கல் பலகை*
*6. உட்பக்க கல்வட்டம்*
*7. வெளிப் பக்க கல்வட்டம்*
*8. பலகைக் கற்களாலான வட்டம்.*

*படையல் பொருட்களாக கிண்ணங்கள், சிறு சாடிகள், மட்கலங்கள், 17 அம்பு முனைகள், 4 கோடாரிகள், செம்பு வடிகட்டி, கோடுகள் உடைய சூது பவளங்கள், பெரிய வில் இவை தவிர மான்களின் எலும்புகள் கண்டுபிடிக்கப்பட்டன. படையலாக மான் பலியிடப்பட்டுப் புதைக்கப்பட்டிருக்கலாம். இவையே ஈமக்காட்டின் முதல் அகழ்வில் கண்டவை.ஈமக் கலனில் மயில் மற்றும் குதிரை உருவங்கள் வரையப்பட்டது கண்டறியப்பட்டது. குதிரை அங்கவடியும் ஈமக்குழியில் கண்டறியப்பட்டது. இப்பகுதியில் குதிரைப் பயன்பாடு இருந்துள்ளதையே இது உணர்த்துகிறது.*

*வசிப்பிட அகழாய்வுகளில் கிடைத்தவை:*

**மட்கலன்கள்:**

*1. கறுப்பு சிவப்பு மட்கலன்கள்*
*2. வெள்ளை தீட்டி மேலே செங்காவி பூசப்பட்டவை*
*3. சிவப்பு வண்ணம் பூசி மெருகேற்றப்பட்டவை*
*4. சிவப்பு மட்கலன்கள்*
*5. கறுப்பு பூசி பளபளப்பாக்கப்பட்டவை.*

*இவை பெருமளவு கிடைத்தவை. தவிர ரோமானிய அரிட்டைன், ரௌலடெட் வகை மட்கலன்கள் மற்றும் ஓடுகள் கிடைத்துள்ளன. ரோமானிய மது சாடி அம்போரா கிடைத்துள்ளது. மிகப்பெரிய சாடிகளான இவற்றை எவ்வாறு இவ்வளவு தொலைவு பத்திரமாகக் கொண்டு வந்தனர் என்பது வியப்பே.*

*திராட்சை மதுவை நம் பகுதியில் விற்றனரா? அல்லது நம் பகுதி வேளிருக்குப் பரிசளித்தனரா? என்பது*





ஆய்வுக்குரியதே. ரோமானிய நாணயங்களும் சிறிதளவு தங்கத்தாலான பொருட்களும் கிடைத்துள்ளன. நாணயங்கள் கிடைத்தன என்பதால்தான் சிலுவானக் காடு அல்லது செலவானக்காடு என்று இப்போது அழைக்கப்படுகிறதா?

( சிலுவானம் - நாணயம்) இது பாரம்பரியமாக ஊர் மக்கள் பயன்படுத்தும் பெயரே.

பெரிய சாடிகள், மட்கலன்கள், குவளைகள், தட்டுகள், மூடிகள் ஆகியவை மண்ணால் செய்யப்பட்டுக் கீறல் போன்ற குறியீடுகளுடன் கிடைத்துள்ளன. தமிழ் பிராமி எழுத்துக்களுடன் கண்டுபிடிக்கப்பட்டவையும் உண்டு.

இரும்பாலான அம்பு முனைகள், இடுக்கி, பாக்கு வெட்டி, கோடாரி, வில், வாள், கேடயம், குதிரை அங்கவடி போன்றவையும் கிடைத்துள்ளன.

**அணிகலன்கள் உற்பத்திச் சாலை:**

பெரில் (பச்சைக் கல்), சபையர்( நீலக் கல்), குவார்ட்ஸ் ( பளிங்குக் கல்), கார்னீலியன் மணிகள் (குஜராத்), லேபிஸ் லசுலி (ஆப்கன் கற்கள்), பூனைக் கண் மணிகள் (இலங்கை) ஆகியவற்றைப் பயன்படுத்தி உலகின் விலை உயர்ந்த ஆபரணங்கள் செய்யப்பட்ட இடமே கொடுமணம் ஆகும். இதற்காகவே வெளிநாட்டினர் காத்துக் கிடந்தனர் என்பது புலனாகிறது. வட இந்திய வணிகர், ஆப்கானிஸ்தான், இலங்கை,கிரேக்கர் மற்றும் ரோமானியர் தங்கி வணிகம் புரிந்த மாபெரும் வணிகத் தாவளமே கொடுமணம் என்பதே உண்மையாகும்.

கண்ணன் -ஆதன், சம்பன், சம்பன்- ஸுமனன், பண்ணன், அந்தவன்-ஆதன், ஆதன், மாகி- சம்பன், சாத்தந்தை அந்தவன், கால அந்தை சம்பன் அகல், வன் மூலன், ஆதன் அஸதன், ஏகன், ஊரணன், போன்ற இயற்பெயர்கள் கண்டறியப்பட்டுள்ளன. வருணி, குவிரன், திஸ்ஸன், விஸாகி, நிகம, ஸிலிகன் போன்ற தமிழி எழுத்துடைய பிராகிருதப் பெயர்களும் கண்டறியப்பட்டுள்ளதாக ஆய்வாளர் கா.இராஜன் தெரிவித்துள்ளார்.

நிகம, விஸாகி போன்ற பானை எழுத்துப் பொறிப்புகள் சமணர் மற்றும் வட இந்திய வணிகர் தொடர்பைக் காட்டுகிறது. கிரேக்க, உரோமானிய மட்கலன்கள் உலகளாவிய தொடர்பையும் உணர்த்துகிறது.

அணிகலன் உற்பத்தி, சங்குவளை உற்பத்தி, ஆடை உற்பத்தி ஆகியவற்றின் தொழிற்கூடமாக விளங்கியமை அகழாய்வில் நிரூபணமாகியுள்ளது. இலக்கியத்திலும் கொடுமணம் பட்ட வினை மான் நன் கலம், என்றும் அருங்கலம் என்றும் குறிப்பிடப்படுவது அணிகலன் உற்பத்தியையே என்பது தெளிவு.

கொடுமணல் பகுதியின் அகழாய்வு முடிவுகளும் இலக்கியத் தரவுகளும் முற்றிலும் பொருந்திக் காணப்படுவதிலிருந்து தமிழ் இலக்கிய ஆதாரங்கள் கூறுவது முற்றிலும் உண்மை என்பது ஐயமற நிரூபணமாகிறது.

# மகாபலிபுரத்து பெரும்பாறை சிற்பம் சொல்லும் கதை

டேவிட் லிவிங்ஸ்டன்



கி.பி ஏழாம் நூற்றாண்டில் பல்லவர்களால் அமைக்கப்பட்ட இந்த புடைப்பு சிற்பமானது எந்த அர்த்தமுமின்றி வெறும் அழகியலுக்காக மட்டும் பல உருவங்களின் தொகுப்பாக உருவாக்கப்பட்டதா? அல்லது ஏதாவது அர்த்தத்துடன் - கதையை; நிகழ்வை வெளிப்படுத்தும் விதமாக - உருவாக்கப்பட்டதா?

இச்சிற்பத்தில் தவக்கோலத்தில் இருக்கும் ஒரு உருவத்தை வைத்து சிலர் இது மகாபாரதத்தில் அர்ஜுனன் தவம் செய்து சிவனிடமிருந்து பாசுபதாஸ்திரம் பெற்ற கதையின் சித்தரிப்பே என்றும். வேறுசிலர், இது இராமாயணத்தில் பகீதரன் தவம்செய்து கங்கையைப் பூலோகத்திற்குக் கொண்டுவந்த கதையின் சித்தரிப்பு என்றும் நம்புகிறார்கள். இக் கதைகளின்படி தவம் செய்பவர்க்கு அருகில் சிவன் அல்லது கங்காதரமூர்த்தியின் உருவம் இருக்கவேண்டும். ஆனால் அருகில் இருப்பதோ தண்டாயுதத்துடன் கிரீடமகுடம் தரித்த வேறொரு உருவம். மேலும் தவம் செய்பவரைத்தவிர மற்ற உருவங்கள் எல்லாம் அக்கதைகளுக்குப் பொருந்தாதவை. எனவே இது அர்ஜுனன் தபசோ, பகீதரன் தபசோ அல்ல. மாறாக "திரிசஷ்டி சலாகாபுருஷர் சரித்திரம்" எனும் ஜைன நூலில் அஜிதநாதர் சரித்திரத்திலுள்ள சகர சாகரர்களின் கதையைத்தான் சிற்பமாக வடித்திருப்பதாக மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் கூறியுள்ளார். அது என்ன கதை, அதில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்பதைத் தெரிந்துகொண்டால் இச்சிற்பக் காட்சிகளை நன்கு புரிந்துகொள்ள முடியும்.

கதைச் சுருக்கம்:

முன்னொரு காலத்தில் பரத நாட்டையாண்டுவந்த

சகர சக்கரவர்த்தி மூன்று நாட்கள் கடும் தவமிருந்து தொண்பொக்கிஷங்களை (நவநிதிகள் - 9 நிதிகள்) நாட்யமாலகனிடமிருந்து (இந்திரனிடமிருந்து) பெற்றார். கிட்டத்தட்ட அலாவுதீனுக்கு கிடைத்த அற்புத விளக்குபோல. நவநிதி ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு தலைமை தேவகுமாரனும், காவலாக ஆயிரமாயிரம் பூதங்களும் இருக்கும். ஒவ்வொரு நிதியும் ஒவ்வொரு செல்வங்களை (உணவு, உடை, ஆபரணங்கள், கட்டிடங்கள், முக்காலத்தை அறிதல், மேலும் பல) வேண்டிய அளவு கொடுக்கக்கூடியவை. இவைகளைக்கொண்டு இன்புற்று ஆட்சிசெய்துவந்தார் சகர சக்கரவர்த்தி. இவருக்கு அறுபதினாயிரம் சாகரர்கள் - பிள்ளைகள். இவர்கள் வளர்ந்து ஒருநாள் தேசத்தைச் சுற்றிப்பார்க்கத் தந்தையின் அனுமதிபெற்றுக் கிளம்பினார்கள். சுற்றுப்பயணத்தின் முடிவில் கயிலாய மலையை அடைந்தார்கள்.



அங்கு இவர்களின் முன்னோரான ரிஷபதேவருக்கு விலைமதிப்பற்ற செல்வங்களால் பரத சக்கரவர்த்தி அமைத்த பொற்கோவில் (ரிஷபதேவரின் உபதேசத்தை செவிமடுப்பதுபோல தன்னுடைய சிலையுடன் கூடிய கோயில்) உள்ளது. இக்கோயிலிலுள்ள செல்வங்கள் கொள்ளையர்களாலும் பொதுமக்களாலும் கொள்ளைபோகப்படலாம் எனவே இக்கோயிலைச்சுற்றி

கொள்ளையர்கள் உள்ளே வராதபடி நீர்வேலி அமைக்கலாம் என்றெண்ணி அவர்களின் தந்தை கொடுத்தனுப்பிய ஒரு நவநிதியின் உதவியால் கோயிலைச்சுற்றி பெரும் அகழி தோண்டப்பட்டு அதில் கங்கையைத் திருப்பிக் கொண்டுவந்து பாய்ச்சப்பட்டது.

இந்த அகழிகள் மிகமிக ஆழமாக நாகலோகம்வரை தொடப்படும்போதே இந்தக்குமாரர்களிடம் நாகராசன் எச்சரித்துச்சென்றநிலையில் நீர்பாய்ச்சப்பட்டபோது நாகலோகமே வெள்ளக்காடாயிற்று. இதனால் குத்துண்ட மதயானையைப் போலச் சினம்கொண்டு தன தீப்பொறி பறக்கும் பார்வையால் அவர்களை விழித்துப்பார்த்ததும் அறுபதினாயிரம் குமாரர்களும் எரிந்து சாம்பலாயினர். குமாரர்கள் இறப்பு செய்தியைக்கேட்ட மன்னன் துயருற்றான். இவ்வேளையில், அகழிக்குள் திருப்பிவிடப்பட்ட நீர் நிரம்பி வெள்ளப்பெருக்கெடுத்து அருகிலுள்ள ஊர்களை, நாடுகளை அழித்ததால் அம்மக்கள் சகர சக்கரவர்த்தியின் அரண்மனை வாயிலில் பெருங்கூட்டமாகக் கூச்சலிட்டு அழுதார்கள். சக்கரவர்த்தி தன பேரனை அனுப்பி நவநிதியத்தின் ஒன்றின் உதவியால் கங்கையைக் கடலில் திருப்பிவிடச் செய்தார்.

இதுவே கதை. இக்கதையே சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது. சரி, இச்சிற்பத்திலுள்ள யானையைப்பற்றி இக்கதையில் ஒன்றும் சொல்லப்படவில்லையே என்ற சந்தேகம் எழுகிறதா! இந்த யானைதான் நாகராசன். நாகம் என்ற சொல்லுக்கும் யானை என்றும் பொருள். நாகலோகம் வெள்ளக்காடானபோது குத்துண்ட மதயானையைப்போல் சினம்கொண்டார் என்ற உவமையை சிற்பத்திலும் உவமையாகவே வடித்திருக்கிறார்கள். யானைக்கு எதிரே மூண்டு தலையற்ற உருவங்கள் சகர குமாரர்கள் இறந்ததைக் குறிக்கிறது. இதன் அருகில் கயிலை மலையில் இருக்கும் கோவில் உள்ளது இதிலுள்ள உருவம் ரிஷபதேவ தீர்த்தங்கரருக்கு பதிலாக திருமால் உருவம் உள்ளது இதற்கு இரண்டு காரணங்கள் இருக்கக்கூடும். ஒன்று, திருமால் ரிஷபதேவர் அவதாரமெடுத்து ஜைனமதம் பரப்பியதாகக் கூறப்படும் புராணத்தின் அடிப்படையில் திருமாலை காட்சிப்படுத்தியிருக்கலாம் அல்லது கி.பி 17 ஆம் நூற்றாண்டில் விஜயநகர ஆட்சியில் வைணவர் ஆதிக்கம் அதிகளவில் இருந்ததால் மகாபலிபுரத்துச் சிற்பங்களில் வைணவர்கள் சில மாற்றங்கள் செய்துள்ளனர் என்று சான்றுகள் இருப்பதால் இச்சிற்பத்தையும் திருமலாக மாற்றியிருக்கக்கூடும் என்கிறார் மயிலை சீனி. வேங்கடசாமி. மேலே சகர சக்கரவர்த்தி தவக்கோலத்தில் அவருக்கு அருகில் இந்திரனும் உள்ளனர். மேலும் அவர்பெற்ற நவநிதியன் தலைமை தேவர்களும் காவல் பூதங்களும் காட்சிப்படுத் தப்பட்டிருக்கிறார்கள். பாறையின் இடையே கோயிலை சுற்றி தோண்டப்பட்ட அகழியும் அதில் நாகர்களின் உருவங்களும் உள்ளது.

அர்ஜுனன்தபசு, பகீதரன்தபசு ஆகிய கதைகளைவிட "சகர சாகரர்களின்" கதையே பொருந்திப்போவதாக உள்ளது. மேலும் அக்காலத்தில் பௌத்த, சமணமும் பரவியிருந்ததால்; (கி.பி ஆறு, ஏழாம் நூற்றாண்டிற்கு பிறகே பௌத்தம், சமணம் நலிவடைய தொடங்கியது) இக்கதைகள் மக்களிடையே பரிட்சயமான ஒன்றாகவும் இருந்தபடியால் இக்கதையையே சிற்பமாக்கியிருக்கிறார்கள்.



# அதக்கூர் நடுகல்

## ஆர்.எஸ். சரவணன், வேலூர்



தொல்காப்பியம் புறத்திணையில் குடையும் வாளும் நாள் கோள் அன்றி எனத் தொடங்கும் பாடலில் “வென்ற வாளின் மண்ணு” எனவரும் சொல்லுக்கு,இரு பெரு வேந்தருள் ஒருவர் மற்றொருவரை வென்றழித்த பின் தன் வெற்றி வாளினைப் போர் கடவுளாகிய கொற்றவை மேல் இரத்தக் கறை போகக் கழுவும் வழக்கம் “வாள் மண்ணுதல்” “வாள் மங்கலம்” என்றும் பெயரிட்டு அழைக்கின்றனர்.

வரலாற்றறிஞ்சர் திரு.மயிலை சீனி வெங்கடசாமி சிலிர்ப்பூட்டும் இந்த வாள் மண்ணுதல் நிகழ்வைச் சாசனச் சான்றாக அதக்கூர்நடுகல்லில் இருந்து ஆதரத்துடன் குறிப்பிட்டுள்ளார்.

செய்யுள் நடையில் 24வரிகளில், அமைந்துள்ள இக்கல்வெட்டு இராஷ்டிரகூட அரசர் கன்னார தேவன் (மூன்றாம் கிருஷ்ணன்) காலத்தில் பொ.ஆ.பி.950ஆம் ஆண்டில் வடிக்கப்பட்டது. கர்நாடகமாநிலத்தில், மைசூர் மாண்டியா

### அதக்கூர் நடுகல்

மாநிலம்: கர்நாடகம்

மாவட்டம்: மாண்டியா

ஊர்: அதக்கூர்

அரசு: கங்கர்

காலம்: பொ.ஆ.பி.950

மொழி: பழங்கன்னடம்

தற்போது நடுகல் இருப்பிடம்: பங்களூர் அருங்காட்சியகம்.

தாலுகாவில், அதுக்கூர் என்னும் ஊரில் செல்லேஸ்வரா கோயிலில், பத்தொன்பதாம் நூற்றாண்டில் திரு. உல்ஷ் அவர்களால் படியெடுக்கப்பட்ட ஒரு நடுகல்லாகும்.

அதக்கூர் நடுகல் தக்கோலப் போருடன் நெருங்கிய தொடர்புடையது. தக்கோலப் போரில் இராஷ்ட்ரகூட அரசன் கன்னர தேவன் மற்றும் இரண்டாம் பூதகன் தலைமையில் இராஷ்டிரகூட படை சோழ அரசர் இராஜாதித்தயனை வெல்கிறது. இப்போரில் பூதுகனால் கொல்லப்பட்ட இராஜாதித்தயன் போரில் வீரமரணம் அடைகிறார். இரண்டாம் பூதுகனின் சேனைத் தலைவன் அல்லது படைத்தளபதியான மணலேரா என்பவன் இப்போரில் வீரத்துடன் போரிட்டு பூதுகனின் வெற்றிக்கு உதவிய காரணத்தால் அதக்கூர் மற்றும் கடியூர் என்ற கிராமத்தைப் பரிசாக வழங்குகிறார்.

மணலேரா பூதுகனின் வளர்ப்பு வேட்டை நாய் ஆன "காளி" என்ற நாயையும் பரிசாக கேட்டு பெற்றுக் கொள்கிறார். பெலத்துர் என்ற மலை தொடரில் மணலேரா வேட்டைக்குச் சென்றபோது காளி, ஒரு காட்டுப் பன்றியுடன் சண்டையிட்டு காளி என்ற அந்த நாய் மரணமடைய அதன் வீரத்தின் நினைவாக மணலேரா அதக்கூரில் செல்லேஸ்வரா கோயிலின் முன்பு இந்த நடுகல்லை எழுப்பியுள்ளார். மேலும் இந்நடுகல்லுக்கு நிலதானமும் மற்றும் தினசரி பூஜைக்கு நெல்லும் நிவந்தனமாக வழங்கியுள்ளார். நடுகல் வழிபாட்டைத் தடை செய்தவர் யாராக இருந்தாலும் அவர்கள் காளியை கொன்ற பாவத்தைச் சுமப்பவர் என்கிறது இக்கல்வெட்டு.



ATUKŪR (MANDYA TALUQ Nº41)



காளியின் கதை நடுகல்லின் முதன்மை கருவாகும் இந்த நீண்ட கல்வெட்டில் துணை கருப்பொருள்தான் தக்கோலப்







போர் நிகழ்வைக் குறிப்பிடுகிறது. இவ்வரிகள் பூதுகன் இராஜாதித்யனைக் குத்தியது,மூன்றாம் கிருஷ்ணனிடமிருந்து விருதுகளையும், பானாவாசி, பேலவோளா, புரிகிரி,கிசுகாடு, பாகிநாடு போன்ற பகுதிகளை பரிசாக பெறுகிறார்.

போர்க்களத்தில் இராஜாதித்யன் அமர்ந்திருந்த யானையைச் செயலிழக்கச் செய்ததற்காக மணலேராவுக்கு அதக்கூர் மற்றும் கடியூர் கிராமத்தைப் பரிசாகக் கொடுத்தார் என்கிற இக்கல்வெட்டு "வாள் கழுவிக் கொடுத்தான்" என்று கூறுகிறது. கல்வெட்டின் இந்தக் கன்னட வரிகள் கடைசி பகுதி வாசகம்,

*23. பன்னெரடும் பெள்வொளத காதியூருமம் பாள்*
*24. கச்சுகொட்டம் மங்கள மஹாஶ்ரீ.*

இக்கல்வெட்டின் இறுதியில் பாள் கச்சு கொட்டம், இதன் தமிழாக்கம் வாள் கழுவிக் கொடுத்தான் என்று திரு. மயிலை சீனி வெங்கடசாமி குறிப்பிடுகிறார்.

இதே கருத்தை *Dr.Hultzsch "Sword Washing"* என்று ஆங்கிலத்தில் குறிப்பிடுகிறார்.(*Epigraphia Indica Vol.VI.page 50-57*).

மேலும் இந்த நடுகல் சாசனத்தின் முக்கியத்துவத்தைக் கருத்தில் கொண்டு திரு.உல்ஷ் வழிகாட்டுதலின் படி இடம்பெயர்க்கப்பட்ட இந்த நடுகல் தற்போது பங்களூர் அருங்காட்சியகத்தைச் சிறப்பிக்கின்றது.

# திருவேடகத்தில் பசுமை நடை

## சித்திரவீதிக்காரன், மதுரை



பசுமைநடைக்குச் செல்வது என்பது கொண்டாட்டமான அனுபவம். 2010 இல் முதன்முதலாகப் பசுமை நடை சென்றதிலிருந்து இந்த கொண்டாட்டம் என் வாழ்வில் தொடர்ந்து கொண்டிருக்கிறது. 2024 ஆம் ஆண்டின் முதல் பசுமை நடைக்கு என்னுடைய மனைவி மற்றும் மகளுடன் அதிகாலை திருவேடகம் நோக்கிப் புறப்பட்டு சென்றோம். ஏடக நாதர் கோவிலின் ஏகாந்தத்தைக் குழுவாகச் சுற்றிப் பார்த்தோம். ஏடகநாதரையும் ஏடவார் குழலியையும் வணங்கி ஓரிடத்தில் கூடினோம்.

திருவேடகத்தில் நடந்த பசுமைநடையில் வைகையாற்றின் கரையில் அமைந்த பழமையான கோயில்களைப் பற்றி எடுத்துரைக்க முடிந்தது. குருவித்துறை ஸ்ரீவல்லப பெருமாள் கோவில், சோழவந்தான் ஜனநாதப்பெருமாள் கோவில், ஜனகை மாரியம்மன் கோவில், தென்கரை சிவன் கோவில், திருவேடகம் ஏடகநாதர் கோவில், கீழமாத்தூர் சிவன் கோவில், தேனூர் வைகையாற்றில் அழகர் எழுந்தருளியது, திருவாப்புடையார் கோவில், சிம்மக்கல் பழைய சொக்கநாதர் கோவில், தெப்பக்குளம் மாரியம்மன் கோவில், திருப்புவனம் பூவனநாதர் கோவில், மடப்புரம் காளி கோவில் என மதுரையின் வைகைக்கரையில் எழுந்துள்ள கோவில்களைப் பற்றிக் குறிப்பிட்டேன்.

பசுமை நடையின் வரலாற்று வகுப்பு ஆரம்பமானது. பேராசிரியர் சுந்தர் காளி ஏடகநாதர் கோவிலின் தலவரலாற்றைத் திருவிளையாடற்புராணம், பெரியபுராணம் போன்ற நூல்களிலிருந்து எடுத்துரைத்தார். சைவ சமண சமயங்களுக்கு இடையிலான பூசல், கூண்பாண்டியனுக்கு வெப்பு நோயைத் தீர்த்தது, அனல் வாதம் - புனல் வாதம் என அவர்கள் வைத்துக் கொண்ட போட்டிகள், ஏடு எதிரேறிய

கதை எல்லாவற்றையும் எடுத்துரைத்தார்.

புராணக்கதைகளை மட்டும் சொல்லாமல் வேதாச்சலம் அய்யாவின் எண்பெருங்குன்றம், நின்றசீர் நெடுமாறன் போன்ற நூல்களிலிருந்த கருத்துக்களையும் - டென்னிஸ் அட்சன் இந்த சமயப்பூசல் குறித்து எழுதிய கருத்துக்களையும் எடுத்துரைத்தார்.

சுந்தர்காளி ஐயா எடுத்துரைத்த தல வரலாற்றைப் பசுமை நடைப் பயணிகள் முதற்கொண்டு அங்கிருந்த சிற்பங்கள் வரை அமைதியாக ரசித்துக் கேட்டுக்கொண்டிருந்தன.

தோழர் அ.முத்துக்கிருஷ்ணன் இதுபோன்ற வரலாற்று வகுப்புகள்தான் பலரையும் பசுமை நடை நோக்கி ஈர்த்துக்கொண்டே இருக்கிறது என்றும் குறிப்பிட்டார். எனது மனைவியும் மகளும் சுந்தர்காளி அய்யாவின் பேச்சைச் சிலாகித்து என்னிடம் குறிப்பிட்டனர்.

திருவேடகம் பசுமை நடையில் கைப்பிரதிகளை அனன்யா, ஆதன், மதுரா, ராஜஸ்ரீ என இளம்தளிர்கள் பசுமை நடையாளர்களுக்கு வழங்கினார்கள். திருவேடகத்தின் வரலாறு, கதை, தொல்லியல் தகவல்கள் அடங்கிய குறிப்பேட்டை



ஆர்வமாக வழங்கினார்கள். பசுமை நடையின் இந்த வரலாற்று வகுப்புகள் அடுத்த தலைமுறைக்குப் பாலமாக அமையும்.

வைகை அணை நிறைந்திருப்பதால் திருவேடகம் ஆற்றில் நீர் இருகரைகளையும் தொட்டுச் சென்று கொண்டிருந்தது. நடுவிலிருந்த மணல் திட்டுகளில் மக்கள் நீராடிக் கொண்டிருந்தனர். குழந்தைகள் படித்துறைகளில் விளையாடி மகிழ்ந்தனர். படித்துறையில் பசுமை நடையினர் அனைவரும் அமர அடுத்த உரை தொடங்கியது.
மதுரையில் வைகைக்கரையிலிருந்த திருமருதப்பூந்துறை, பேச்சியம்மன் படித்துறை, ஓபுளா படித்துறை போன்ற பல படித்துறைகளை இழந்துவிட்டோம். இன்று எல்லோரும் அமர்வதற்கு திருவேடகத்தின் படித்துறை மட்டும் மீதமுள்ளதைக் குறிப்பிட்டேன்.

திருவேடகப்பகுதி சங்க காலத்தில் பாகனூர் என்று அழைக்கப்பட்டதை கொங்கர்புளியங்குளம் தமிழிக்கல்வெட்டு – வேள்விக்குடி செப்பேடு போன்றவற்றைச் சான்றாகச் சொல்லி எடுத்துரைத்தேன். சோழன்தலைகொண்ட வீரபாண்டியன் சோழர்களை வென்றதன் நினைவாக பாகனூர் பகுதியை சோழ அந்தகம் எனப் பெயர் மாற்றியது பின் ராஜராஜசோழன் இப்பகுதிக்கு ஜனநாத சதுர்வேதி மங்கலம் எனப்பெயர் மாற்றியது இரண்டும் போய் இப்போது சோழவந்தான் என்று





அழைக்கப்படுவதைச் சொன்னேன். வைகையின் இலக்கியச் சிறப்பை பேராசிரியர் சுந்தர்காளி எடுத்துரைத்தார்.

இரண்டாயிரத்து ஆண்டுகளுக்கு முன்பு வைகைக்கரையில் மக்களின் வாழ்க்கை எப்படி இருந்தது என்பதை நாம் சிலப்பதிகாரத்திலும் பரிபாடலிலும் பார்க்கலாம். சிலப்பதிகாரமும் மணிமேகலையும் இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. ஆதிக்காப்பியங்கள். இவையிரண்டும் சங்கப்பாட்டுகளோடு மிகுந்த ஒற்றுமையுடையவை.

சங்கப்பாடல்கள் பெரும்பாலும் ஆசிரியப்பா யாப்பிலே அமைந்தவை. இந்த இரண்டு காப்பியங்களும் கம்பராமாயணம் போலவோ, சீவக சிந்தாமணி போலவோ இல்லாமல் இவை ஆசிரியப்பாவிலே அமைந்திருக்கின்றன. சிலப்பதிகாரத்திலே விரிவாக வைகை நதி இடம்பெறுகிறது. அந்தப் பகுதியைப் படித்துப் பார்த்தீர்கள் என்றால் மிக அழகாகயிருக்கும். வைகை அப்போது இன்னும் மிக அழகாகயிருந்திருக்கும். வைகை காவிரி போல ஒரு ஜீவ நதி இல்லை. (இப்போது காவிரியிலும் தண்ணீர் இல்லை என்பது வேறு கதை).

வைகையில் வெள்ளம் வரும் வேளைகளில் மக்கள் எல்லாம் தண்ணீரில் வந்து குளிப்பதை எல்லாம் பரிபாடல் என்ற நூல் விரிவாகப் பதிவு செய்கிறது. கி.பி. நான்காம் அல்லது ஐந்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தது. வைகைக்குக் குளிப்பதற்காக குடும்பங்குடும்பமாக வருகிறார்கள்.

பரிபாடலிலே வைகை தவிரத் திருமாலைப் பற்றிய பாடல்கள் இருக்கின்றன, முருகனைப் பற்றிய பாடல்கள் இருக்கின்றன. குறிப்பாக வைகையைப் பற்றிய பாடல்கள் நிறைய இருக்கின்றன. வள்ளிக்கும் தெய்வானைக்கும் இடையிலான முரண்பாட்டைப் பற்றி ஒரு பரிபாடல் பேசுகிறது. அது எப்படித் தமிழ் மரபுக்கும் வைதீக மரபுக்கும் உள்ள முரண்பாடாக இருக்கிறது என்பதைச் சுட்டிக்காட்டி நானொரு கட்டுரை எழுதியிருக்கிறேன்.

சிலப்பதிகாரத்திலும் பரிபாடலிலும் பாடல்பெற்ற வைகையின் கரையில் அமர்ந்திருக்கிறோம். இன்று வைகையில் நன்றாக நீர் ஓடிக்கொண்டிருக்கிறது. நம் பிள்ளைகள் மகிழ்ச்சியாக நீரிலே விளையாடிக்கொண்டிருக்கிறார்கள். இது நிலைக்க வேண்டும். இந்த நதி உயிர்பெற வேண்டும்.

மதுரையிலே கிருதுமால்நதி என்ற ஒன்று இருந்தது இல்லையா. வண்ணநிலவன் கம்பாநதி என்றொரு நாவல் எழுதி அதற்கு மறைந்துபோன நதி என்றும் துணைத்தலைப்பு கொடுத்திருப்பார். அதுபோல மறைந்துபோன ஒன்றாக இந்த நதி ஆகிவிடக்கூடாது. தூய்மை படுத்தவேண்டும். தேம்ஸ் நதி நூறாண்டுகளுக்கு முன்பு அவலமான நிலையிலிருந்தது. இப்போது எவ்வளவு அழகாகயிருக்கிறது என்று பாருங்கள். எனவே, நாம் நதிகளைத் தூய்மைப்படுத்தி அழகுள்ளதாக மாற்றுவோம்.

பேரா. சுந்தர்காளியின் 60வது பிறந்தநாளை முன்னிட்டு பேராசிரியர் “சுந்தர்காளி அவர்களைக் கொண்டாடுவோம்” என்ற 16 பக்கச் சிறுநூலை வைகைக்கரையில் பசுமைநடையாளர்கள் வெளியிட்டனர். வந்திருந்த அனைவருக்கும் அந்த குறுநூல் இலவசமாக வழங்கப்பட்டது.

வந்திருந்த அனைவருக்கும் சூடாக இட்லியும் சுவையான சாம்பார் சட்னியும் வழங்கப்பட்டது. மதுரை புரோட்டாவுக்கு மட்டுமல்ல. இட்லிக்கும் புகழ்பெற்றது. அதிகாலை தொடங்கி நள்ளிரவு வரை இட்லி மதுரையில் கிடைக்கும். இட்லி ஓர் உன்னத உணவுதான் என்பதைப் பசுமை நடையில் சாப்பிடும் ஒவ்வொரு முறையும் உணர்கிறேன்.



# ஆதிச்சநல்லூர்: எதிர்காலம் கொண்ட வளமான கடந்த காலம்

## ஜே. ஆஸ்டின் பென் தாஸ்

ஆராய்ச்சியாளர், சென்னைப் பல்கலைக்கழகம்



ஆதிச்சநல்லூர் தமிழ்நாட்டின் தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ள ஒரு தொல்லியல் தளமாகும், இது பல முக்கியமான தொல்பொருள் கண்டுபிடிப்புகளின் தளமாகும். ஆதிச்சநல்லூர் பகுதியிலிருந்து 2004-ம் ஆண்டு தோண்டப்பட்ட மாதிரிகளின் கார்பன் டேட்டிங் மூலம் அவை கி.மு.905 முதல் கி.மு.696க்கு இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்தவை எனத் தெரியவந்துள்ளது. முற்காலப் பாண்டிய அரசின் தலைநகரான கொற்கை ஆதிச்சநல்லூரிலிருந்து சுமார் 15 கி.மீ தொலைவில் உள்ளது.

பாண்டிய ராஜ்ஜியம் தென்னிந்தியாவில் அறியப்படாத பழமை வாய்ந்த ஒரு பண்டைய தமிழ் மாநிலமாகும். பாண்டியர்கள் வரலாற்றுக்கு முந்தைய காலத்திலிருந்து பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதி வரை தமிழ் நாட்டை ஆண்ட மூன்று பழங்காலத் தமிழ் பேரரசுகளில் ஒன்றாகும் (மற்ற இரண்டு சோழர் மற்றும் சேரர்). பாண்டிய வம்சம் இந்தியத் தீபகற்பத்தின் தென்முனையில் உள்ள துறைமுகமான கொற்கையிலிருந்து ஆட்சி செய்து பின்னர் மதுரைக்குக் குடிபெயர்ந்தது. சங்க காலத்தின் முற்காலப் பாண்டியர்கள் பண்டைய தமிழ்

நாட்டின் முக்கிய ராஜ்ஜியங்களில் ஒன்றாகும். முற்காலப் பாண்டிய ராஜ்ஜியம் மேற்கில் திருவிதாங்கூர், வடக்கே வெள்ளாறு, கிழக்கு மற்றும் தெற்கில் கடல் வரை பரவியது.

இந்த தளத்தில் மனித மண்டை ஓடுகள், எலும்புகள், எலும்புக்கூடுகள், நெல் உமிகள் மற்றும் கற்காலத்தின் செல்ட்ஸ் ஆகியவற்றைக் கொண்ட கலசங்கள் கிடைத்துள்ளன. எச்சங்கள் கிமு 500 முதல் கிமு 200 காலகட்டத்தைச் சேர்ந்தவை.

1876 ஆம் ஆண்டு முதல், இந்தத் தளத்திலிருந்து ஜெர்மன் ஆய்வாளர் டாக்டர். எஃப். ஜாகோர் (Dr. F. Jagor) அகழ்வாராய்ச்சிகள் மூலம் வியக்கத்தக்கக் கண்டுபிடிப்புகளைக் கண்டுபிடித்தார். அவற்றை மீண்டும் பெர்லினில் உள்ள ஓர் அருங்காட்சியகத்திற்குக் கொண்டு சென்றார்.

அலெக்சாண்டர் ரியா (Alexander Rea) ஆதிச்சநல்லூரில் தனது பணிக்காக அறியப்பட்டவர். அவர் 1902 இல் தென்னிந்தியாவின் முதல் தொல்பொருள் ஆய்வுக் கண்காணிப்பாளராக இருந்தார். ரியா கண்டுபிடித்த அனைத்துத் தொல்பொருட்களும் உடனடியாகப் பட்டியலிடப்பட்டு 1915 ஆம் ஆண்டு “ஆதிச்சநல்லூர்



மற்றும் பெரம்பைரிலிருந்து வரலாற்றுக்கு முந்தைய பழங்காலங்களின் பட்டியல்" என்ற தலைப்பில் ஆவணப்படுத்தப்பட்டது.

ஆதிச்சநல்லூரில் பெருங்கற்கால (மெகாலிதிக்) புதைகுழிகள் உள்ள இடம் 1904 ஆம் ஆண்டு நினைவுச் சின்னங்கள் மற்றும் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் 1921 ஆம் ஆண்டு முதல் ASI ஆல் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இது இந்தியாவில் தோண்டப்பட்ட முதல் தளமாகும். இந்த தொல்லியல்தளம், 1876 ஆம் ஆண்டில் ஜெர்மனியைச் சேர்ந்த ஆண்டிவ் ஜாகோரால் தோண்டப்பட்டது. ஆதிச்சநல்லூர் பகுதியிலிருந்து எடுக்கப்பட்ட மாதிரிகள் கார்பன் டேட்டிங் மூலம் கிமு 905 முதல் கிமு 696 வரையிலான காலகட்டத்தைச் சேர்ந்தவை எனத் தெரியவந்துள்ளது. 2005 ஆம் ஆண்டில், மனித எலும்புக்கூடுகளைக் கொண்ட சுமார் 169 களிமண் கலசங்கள் கண்டுபிடிக்கப்பட்டன, அவை குறைந்தது 3,800 ஆண்டுகளுக்கு முந்தயவை.

ஆதிச்சநல்லூரில் உள்ள முக்கியமான தொல்லியல் கண்டுபிடிப்புகள்

ஆதிச்சநல்லூரில் மனித மண்டை ஓடுகள் மற்றும் எலும்புகள் அடங்கிய கலசங்கள், தேரில் செல்லும்



படம்: *Sudalaimaniselvan*

மனிதனின் வெண்கலச் சிலை, தங்கம் மற்றும் வெண்கலப் பொருட்கள் மற்றும் தொல்பொருள் கண்டுபிடிப்புகளின் பொக்கிஷம் ஆகியவை ஆதிச்சநல்லூரில் உள்ள சில முக்கியமான தொல்பொருள் கண்டுபிடிப்புகளில் அடங்கும்.

ஆதிச்சநல்லூரில் கண்டெடுக்கப்பட்ட கலசங்களில் மனித மண்டை ஓடுகள் மற்றும் எலும்புகள் இருப்பதால் அவை புதைக்கப்பட்ட கலசங்கள் என்று நம்பப்படுகிறது. ஆதிச்சநல்லூரில் கண்டெடுக்கப்பட்ட கலசங்கள், மத்தியப் பிரதேசத்தில் உள்ள மால்வாவில் கிடைத்த புதைகுழிகளை ஒத்திருப்பதால், இரு பகுதிகளுக்கும் இடையே வர்த்தக தொடர்புகள் இருந்ததாகக் கூறப்படுகிறது. ஆதிச்சநல்லூர் தளத்தில் பணிபுரியும் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களால், சுமார் நான்கு அடி உயரத்தில் ஒரு பெரிய மூடியுடன் கூடிய புதைகுழி கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

ஆதிச்சநல்லூர் மட்டுமின்றி இந்தியத் துணைக்கண்டம் முழுவதிலும் உள்ள பெருங்கற்கால மனிதனின் இயற்பியல் மானுடவியலைப் புரிந்து கொள்ள விலங்கியல் மற்றும் மானுடவியலாளர்களால் ஆய்வு செய்யப்பட்டதால்



படம்: *Balurbala*



ஆதிச்சநல்லூரில் கிடைத்த மனித மண்டை ஓடுகள் குறிப்பிடத்தக்கவை. மண்டை ஓடுகளை பிரிட்டிஷ் விலங்கியல் நிபுணரான சாலமன் ஜுக்கர்மேன் (Solomon Zuckerman) ஆய்வு செய்தார், அவர் மற்றொரு குறிப்பிடத்தக்கப் பகுப்பாய்வு செய்தார். ஆதிச்சநல்லூரில் தோண்டியெடுக்கப்பட்ட எலும்புக்கூடுகள் தற்காலத் தமிழ் மக்களின் வாழ்வியல் அமைப்போடு ஒத்துப் போகவில்லை. உதாரணமாக, பல மண்டை ஓடுகளின் தாடைகள் நீண்டு இருந்தது, வழக்கமான தமிழ் அல்லது தென்னிந்தியாவைக் காட்டிலும் ஆஸ்திரேலியப் பழங்குடியினர் அல்லது கறுப்பின ஆப்பிரிக்கர்களின் தாடைகளுடன் பொருந்துவதாகத் தோன்றியது.

1899 முதல் 1905 வரை ஆதிச்சநல்லூரில் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் 20க்கும் மேற்பட்ட தங்கக் கயிறுகள் மற்றும் முகப்புகளைக் கண்டுபிடித்துள்ளனர். சமீபத்தில், 2022 ஆம் ஆண்டில், தாமிரபரணி கரையோரத்தில் ஐகானிக் அருங்காட்சியகத் திட்டத்திற்காக அகழாய்வு செய்தபோது, அந்த இடத்தில் தங்கக் காதணி கண்டுபிடிக்கப்பட்டது. ஆதிச்சநல்லூரில் தங்க ஆபரணங்களைத் தவிர, வெண்கலம் மற்றும் பிற பொருட்களால் செய்யப்பட்ட காதணிகள், நெக்லஸ்கள் மற்றும் வளையல்கள் உட்படப் பல ஆபரணங்களைக் கண்டுபிடிக்கப்பட்டது.

ஆதிச்சநல்லூரில் கண்டெடுக்கப்பட்ட வெண்கலப் பொருட்களில் சிலைகள், சடங்குப் பொருட்கள் மற்றும் கத்திகள் மற்றும் ஈட்டிகள் போன்ற ஆயுதங்கள் அடங்கும். ஆதிச்சநல்லூரில் கண்டெடுக்கப்பட்ட உள்ளங்கை அளவிலான வெண்கலச் சிலை கருவுறுதலைக் குறிக்கும் ஒரு தாய் தெய்வத்தைக் குறிக்கிறது. ஆதிச்சநல்லூரின் இரும்புக் கால புதைகுழிகளில் இருந்து உயர் தகரம் கொண்ட வெண்கலத்தின் வடிகட்டித் துண்டுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஆதிச்சநல்லூர் அகழ்வாராய்ச்சியில் முதன்முறையாக குழந்தைக்கான முதுமக்கள் தாழியில் வெண்கல வளையல்கள் கிடைத்தன.

எதிர்கால வளர்ச்சி

ஆதிச்சநல்லூரை உலக அளவில் அடையாளம் காணக்கூடிய முயற்சிகள் நடந்து வருகின்றன. திருச்செந்தூர் நெடுஞ்சாலையில் உள்ள ஆதிச்சநல்லூரைப் பிரபலமான சுற்றுலா தளமாக மேம்படுத்த மத்திய அரசு விரும்புகிறது. ஆதிச்சநல்லூரை ஆன்-சைட் மியூசியமாகவும் மேம்படுத்த அரசு நடவடிக்கை எடுத்து வருவதாக மத்தியக் கலாச்சாரம் மற்றும் சுற்றுலாத்துறை அமைச்சர் தெரிவித்துள்ளார். 2020 ஆம் ஆண்டில், மத்திய நிதியமைச்சர் நிர்மலா சீதாராமன், மத்திய அரசு அருங்காட்சியகங்களை உருவாக்கும் ஐந்து முக்கிய இடங்களில் ஆதிச்சநல்லூரும் ஒன்றாக இருக்கும் என்று அரசு நிதிநிலையில் அறிவித்தார்.

கிமு 905 முதல் கிமு 696 வரை தாமிரபரணி நீர்வழிக்கு அருகில் வாழ்ந்த நாகரீக சமுதாயத்தைச் சேர்ந்த தொல்பொருள் கண்டுபிடிப்புகள் அருங்காட்சியகத்தில் சிறப்பித்துக் காட்டப்படும்.

# தச்சுக்கலை சான்றோர்

## Ar. வித்யா இலட்சுமி

கட்டிடக்கலை வல்லுநர்கள், மாணவர்கள், தச்சர்கள், மர வேலை செய்யும் கலைஞர்கள் போன்றோருக்குப் பயிற்சி அளிக்கும் திரு தட்சனேஸ்வரன் திருமூர்த்தி அவர்களுடன் ஒரு சந்திப்பு. இளங்கலை மின் பொறியியல் கல்வி பெற்று, கனடாவில் உள்ள நியூ ப்ருன்ச்விக் பல்கலைக் கழகத்தில் புவியியல் பொறியியலில் முதுகலைப் பட்டம் பெற்றுள்ளார். 2015 ஆம் ஆண்டில், கனடாவில் பல விதமான கட்டுமான திட்டங்களில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டு தொழில்முறை பொறியாளரானார். ஆராய்ச்சியில் மிகுந்த ஈடுபாடு கொண்ட இவர், டாக்டர். ரிச்சர்ட் லங்களே அவர்களிடம் நியூ ப்ருன்ச்விக் பல்கலை கழகத்தில் புவியிடங்காட்டி / உலக இடநிலை உணர் துறையில் மேற்கொண்டார்.



பதினேழு வருடங்கள் கனடாவிலிருந்து சென்னை



திரும்பிய இவர், காலணி, மெத்தை மற்றும் தலையணைகள் தயாரிப்பதில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டார் . மெத்தைக்குத் தகுந்த கட்டில் தேவையென, 5 நிமிடத்தில் இணைக்கும் வகையில் மரத்தில் கட்டில்கள் வடிவமைத்தார். அப்படியாக இவரின் பயணம் மரங்களை நோக்கி துவங்கியது.

இவரின் மரம் சார்ந்த அறிவு மற்றும் அனுபவத்தைக் கண்டு, சென்னை சூளைமேட்டில் உள்ள ருக்மணி போர்ட்ஸ் என்னும் மரம் வர்த்தகம் செய்யும் கடை, அவர்களை வழி நடத்தும்படி கேட்டுக்கொண்டது. இந்தச் செயல்பாட்டில், மரங்களின் தரத்தைப் பற்றியும், அதைக் கொண்டு வடிவமைப்பதைப் பற்றியும் அறிந்துகொண்டார். மர விற்பனையை அதிகரிக்க, பல இணைய வழி கருத்தரங்குகளையும் நடத்தினர். பிறகு இவரின் வடிவமைப்பில் பல மரம் சார்ந்த பொருட்களை வடிவமைத்துள்ளார்.

மாணவர்களுக்கும் மரம் சார்ந்த புரிதலை அதிகப்படுத்த, அவர்களுக்கு மரம் பற்றியும், அதில் பொருட்கள் உருவாக்குவது பற்றியும் சிறப்புப் பயிற்சிகள் அளிக்கிறார். இந்த உலகத்தைப் பல ஆபத்துகள் விளைவிக்கும் நுண் நெகிழி துகள்களிலிருந்து காக்க, மரம் சார்ந்த அறிவு நமக்கு அவசியம் என்று நினைக்கிறார்.

இத்தகைய பயிற்சிகள், மாணவர்களுக்கு மரம் பற்றிய புரிதலைக் கொண்டுவரவும், அதில் உள்ள நுணுக்கங்களை அறிந்துகொள்ளவும் உதவும். மரத்தை எப்படித் தேர்வு செய்வது, அதை எந்த வகையில் நம் பயன்பாட்டிற்கு உபயோகப்படுத்துவது என்பது இந்தப் பயிற்சியின் நோக்கம். மேலும் இந்தப் பயிற்சிக்குப் பிறகு, கலந்து கொண்டவர்கள் தாங்களாகவே மர வேலைகள் செய்யும் வகையில் கற்க வேண்டும் என்று எண்ணுகிறார். பலவித மர மாதிரிகளைச் சேகரித்து வைத்திருக்கிறார், மேலும் பொதுவில் எந்த எந்த மரங்கள் எதற்குப் பயன்படுத்துவது என்ற கருத்து உள்ளது. அதை விடுத்தது இன்னும் என்ன என்ன மரங்களை நாம் பயன்படுத்த முடியும் என்று விளக்குகிறார்.

பொதுவாக மரங்கள் பயன்பாட்டை மக்கள் தவிர்க்க, கறையான்கள் ஒரு காரணமாக உள்ளது. அதை நாம் எப்படித் தவிர்ப்பது, தரமான மரத்தை எப்படித் தேர்வு செய்வது, நீண்ட நாட்கள் பயன்படுத்தும் வகையில் மரங்களைத் தேர்வு செய்யும் முறையும், மரங்களின் உள்ள அமைப்பைப் பொறுத்து அதில் வளைவுகள் வராமல் தடுக்கவும், வெடிப்புகள் வராமல் இருக்கவும் கற்பிக்கிறார். மரங்களை இணைக்கப் பயன்படுத்தும் பல்வேறு விதமான ஒட்டக்கூடிய பசை போன்றவற்றையும் கற்க முடியும். மரங்கள் நீரை உறியும் தன்மை, அதன் கணம், வலிமை போன்றவற்றை அறிந்துகொள்ளவும் பயிற்சி அளிக்கிறார்.

நேரடியாக மர ஆலைகளுக்கே அழைத்துச் சென்று மரங்களைப் பற்றி விளக்கி, தொட்டு உணர வைத்து, அதை வெட்டும் முறைகளையும் விளக்குகிறார். மரங்களைப் பற்றிய புரிதலை அதிகப்படுத்தவும் , நம் பயன்பாட்டில் பல வித மரங்களைக் கொண்டு வரவும் இத்தகைய பயிற்சிகள் துணைபுரியும்.

# கொங்கு தமிழ் இலக்கியம் கூறும் அறுவைசிகிச்சையின் மூலம் குழந்தை பிரசவம்

## தளி. ராஜசேகர் பாண்டுரங்கன்



பண்டையக் கலவேட்டுகளில் மங்கலம் என்ற பட்டப் பெயருடன் மருத்துவம் செய்யும் மரபினர் பற்றிய குறிப்புகள் வருகின்றன.

கிபி. ஏழு மற்றும் எட்டாம் நூற்றாண்டுகளில், பாண்டி மங்கல அதி அரைசன் சாத்தன் ஏறன், மூவேந்த மங்கலப் பேரரையன் மாறன் காரி, பாண்டி மங்கள, விசயரையன் மாறன் எயினன், பாண்டி அமிர்த மங்கலப் பேரரைசன் (ஆயின) சாத்தன்கணபதி, வீர மங்கலப்பேரரைசன் மூர்த்தி எயினன், பாண்டி இளங்கோ மங்கலப் பேரரைசன் சங்கன் சிரிதரன் போன்ற இன்னும் பல பெயர்கள் நமக்கு கிடைக்கின்றன.

இதில் பாண்டி மங்கல அதிஅரைசன் ஏறன் என்பவர், பாண்டிய அதிகாரியாக இருந்துள்ளார் என்பதும், மலையடிக்குறிச்சியில் குடைவரைக் கோவில் ஒன்றை உருவாக்கியுள்ளார் என்பதும் கல்வெட்டுகள் வாயிலாக அறியமுடிகிறது .

மூவேந்த மங்கலப் பேரரையன் மாறன் காரி, பாண்டி மங்கள, விசயரையன் மாறன் எயினன் என்போர் பாண்டிய மன்னன் வரகுண பாண்டியரின் கீழ் மந்திரிகளாக இருந்துள்ளனர்.

எயினன், பாண்டி அமிர்த மங்கலப் பேரரைசன் (ஆயின) சாத்தன்கணபதி, வீர மங்கலப்பேரரைசன் மூர்த்தி



எயினன் அனைத்துப் படைகளின் தளபதி எனக் கூறும் மஹாசாமந்தன் என்ற பதவியை வகித்தவர்கள்.

பாண்டி இளங்கோ மங்கலப் பேரரைசன் சங்கன் சிரிதரன் என்பார் பாண்டியனின் யானைப் படைத் தலைவர் ஆவார்.

இவர்களின் பெயர்களில் வரும் மங்கலம் என்பன பிராமண ஊர்களைக் குறிக்கும் பின்னொட்டுகள் ஆகும். ஆயினும் கல்வெட்டுகளின் இம்மங்கலம் என்ற பெயர் நாவிதரான வைத்தியக் குலத்தைச் சேர்ந்தவரை குறித்தது.

வடமொழியிலும், தமிழிலும் 'மங்கலம்' என்பது மகிழ்ச்சி, போர், பேறு, நற்சடங்கு என்று பல பொருள்களைக் கொண்டுள்ளது. தமிழில் மங்கலன், மங்கலியன் நாவிதரையும் குறிக்கும்.' தெலுங்கிலும் 'மங்கலி' என்றால் நாவிதரைக் குறிக்கும்.' எனவே மங்கலப்பட்டமுடையோர் நாவிதர் குலத்தைச் சேர்ந்தவர் எனக் கொள்ளலாம்.

உண்மையில் மேலே உள்ளவர்களில் இடையில் உள்ள நால்வர் களக்குடி அல்லது கரவந்தபுரம் என்னும் பெயர்கொண்ட ஊரினராகவும் வைத்யகுலத்தைச் சேர்ந்தவராகவும் குறிப்பிடப்படுகின்றனர். வைத்தியக் குலத்தைச் சேர்ந்தவரின் கல்வெட்டுகளில் மங்கலம் என்ற பட்டம் வருவதைப் பல கல்வெட்டுகள் நிறுவுகின்றன.கே.வி. ராமன் போன்ற சில ஆய்வாளர்கள் வேதசாத்திரஉள்ளதாலும், அகராதிகளும் இதைக் குறிப்பிடுவதாலும் வைத்தியக் குலம் என்பதை வைதீகக் குலம் என நிறுவ முற்படுகின்றார்.

ஆனால், வைத்தியருக்கும் மருத்துவர் என்ற பொருள் பயின்று வருவதாலும், வைத்திய குலத்தினர் பிராமணர் என்ற குறிப்பு எந்த கல்வெட்டுகளிலும் காணப்படாததாலும், வேத சார்பு பற்றி கேள்வி எழுகிறது. மூவேந்த மங்கலப் பேரரையன் மாறன் காரி என்பவர் சாஸ்திரங்கள் கற்றவர், நல்ல புலவர், நல்ல பேச்சாற்றல் உடையவர் எனபதை வேள்விக்குடி செப்பேடு குறிப்பிடுகிறது. ஆயினும் வேத சார்பு பற்றி குறிப்புகள் இல்லை என்கிறார் கல்வெட்டு அறிஞர் திரு. சுப்புராயலு அய்யா அவர்கள்.

இதனைக் கருத்தில் எடுத்துக்கொண்டால் இவர்கள் நாவிதர் குலத்தைச் சேர்ந்தவர் என்பதை அறியலாம்.

இம் மங்கலப் பேரரையர்கள் முற்காலப் பாண்டிய அரசியலில் ஒரு முக்கிய இடத்தை வகித்தார்கள். ஆனால் என்ன காரணத்தினாலோ எட்டாம் நூற்றாண்டுக்குப்பின்



இவர்கள் பாண்டிய அரசிலிருந்து மறைந்துவிடுகிறார்கள். சோழ அரசில் மட்டும் இவர்கள் 11ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரை காணப்படுகிறார்கள்.

பாண்டியனது ஆட்சியில் முற்பகுதியில் எல்லாப் படைகட்கும் மாசாமந்தானாக (மகா சாமந்தாதிபதி - பெரும் படைத்தலைவன்) விளங்கியவன் சாத்தன் கணபதி ஆவான். அதனால் சாமந்த பீமன் என்று வழங்கப்பெற்றவன். இவன் வைத்தியக் குலத்தில் பிறந்தவன். இவன் திருப்பரங்குன்றத்திலுள்ள கோயிலுக்குத் திருப்பணி புரிந்து அங்குள்ள திருக்குளத்தையும் திருத்தி அறச்செயல்களையும் ஒழுங்குபடுத்தினான் என்று அவ்வூரிலுள்ள பாண்டியன் பராந்தகனது ஆறாம் ஆண்டு கல்வெட்டொன்று உணர்த்துகின்றது. இவன் திருப்பரங்குன்றத்தில் சிவபிரானுக்குக் கோயில் அமைத்துத் தன் வேந்தனுடைய ஆறாம் ஆட்சியாண்டில் அதில் கடவுளை நிலைப்படுத்தினான். இவனுடைய மனைவி நக்கன் கொற்றி என்பாள் அவ்வூரில் துர்க்கைக்கும் ஜேஷ்டா என்ற சேட்டைக்கும் வெவ்வேறு கோயில் அமைத்தாள் அக்கல்வெட்டின் பிற்பகுதியால் அறியப்படுகின்றது

அவனுடைய தம்பி ஏனாதி சாத்தன் சாத்தன். பெரு வீரனான இத்தலைவன் தமிழ்ப் புலமையுடையவனாகவுமிருந்து பாண்டி வேந்தர் பலருடைய வரலாறுகளைப்பாடி அதனை வேள்விக்குடிச் செப்பேடுகளில் தமிழ்ப் பகுதியில் சேர்த்த பெருமை வாய்ந்தவன், எனவே, அறம்புரிந்த அரசனுடைய முன்னோர்கள் வரலாற்றைச் செப்பேடுகளில் வரைந்துவைக்கும் வழக்கத்தைப் பாண்டி நாட்டில் முதலில் தோற்றுவித்தவன் இவனேயாவன். ஏனாதி என்ற பட்டம் பெற்றுள்ளதால், இவனும் ஒரு படைக்குத் தலைவனாக இருந்துள்ளான்.

எனவே மன்னர்களின் செப்பேடு எழுதும் மக்கள் கூட தனிப்பட்ட முறையில் சாதனை படைத்த மக்களாகவே இருந்திருக்க வேண்டியுள்ளது.

மேலும் இந்த வேள்விக்குச் செப்பேட்டில் உள்ள பிராமணருக்கு நிலத்தை மீட்டுக் கொடுக்கும் ஆணையை நிறைவேற்றும் அதிகாரம், கரவந்தபுரத்து வாசியான மூவேந்த மங்கல பேரரையன் ஆன வைத்திய சிகாமணி மாறன் காரி என்பான் நியமிக்கப்பட்ட செய்தியும் காணப்படுகிறது. மேற் குறிப்பிட்ட அனைவருமே மருத்துவம் பார்க்கும், வைத்தியக் குலத்தைச் சேர்ந்த வீரர்கள். நாவிதர் என்றும், வைத்தியர் என்றும் என்ற மருத்துவ தொழில் புரிந்தோர், தமிழகத்தில் மங்கல அரையன், மங்கள ராஜன் என்று அழைக்கப்பட்டனர். இவர்கள் அரசருக்குக் கீழே குறுநில ஆட்சியாளர்களாகவும் இருந்துள்ளனர். இவர்களே வட தென்னகப் பகுதியிலும் ஆந்திரப் பகுதியிலும் நியோகி நயீ



பிராமணர், மங்கலா, மங்கலி என்று அழைக்கப்படுகின்றனர். இவர்களில் ஒரு சாரார் சடங்கு நிகழ்வுகளின் போது, மங்கள இசை வாசிப்போராகவும் இருந்துள்ளனர். எட்கர் தர்ஸ்டன் குறிப்புகள் படி 1900 களில் இந்த மங்கள இசை வாசிப்போர் இசை வேளாளர் என அழைக்கப்பட்டுள்ளனர்.

தஞ்சை பெரிய கோவில் கல்வெட்டில், ராஜராஜனின் கல்வெட்டு, பஞ்சவன் மங்கலப் பேரரையன் பவருத்திரன் என்பவரை கோலின்மை எனக் கூறுகிறது. இது மருத்துவத் தொழிலில் அவர் சிறந்து விளங்கினார் என்பதாக அமைந்த வரிகளாகும். இப்பெயருக்குப் பக்கத்தில் ராஜராஜ பிரயோகதரையன் என்ற அம்பட்டன் குறிக்கப்படுகிறார். பிரயோகம் மருத்துவச்சிகிச்சையைக் குறிக்கும். அம்பட்டன் என்ற சொல்லும் மருத்துவரைக் குறிக்கும்.

சில காலத்திற்கு முன்பு வரை கிராமப் புறங்களில் நாவிதர் எனும் பிரிவினரே மருத்துவத் தோழி புரிவோராக இருந்துள்ளனர். அவர்களின் பெண்கள் மருத்துவச்சி என்று அழைக்கப்பட்டு, பேறு காலத்தில் பிரசவம் பார்ப்போராக இருந்துள்ளனர். ஒரு அரசியின் பேறுகாலத்தில் அறுவைச்சிகிச்சை செய்த ஒரு ‘மங்கலை’ பற்றி கொங்குமண்டலசதகம் குறிப்பிடுகிறது. உண்மையில் பழந்தமிழ்ச் சமூகத்தில் நாவிதக்குலம் ஒரு மதிப்புடைய குலமாகவே இருந்தது. கொங்குநாட்டில் இன்றும் நாவிதர் பலகூட்டத்தினருக்கு, குறிப்பாகக் கொங்குவேளாளருக்கு மணவினை போன்ற சடங்குகளின் போது முக்கியப் பொறுப்புக்களையேற்று நடத்துகின்றனர்.

கொங்குமண்டல சதகத்தில்,

“குறைவறு தெண்ணீர் நதியணை காந்த புரத்தொருநல்
. விறைமகளார் ' மக வீனப் பொறாதுட லேங்கவகிர்
‘துறைவழி பேயற்று மகிழ்ஷட்டு மங்கலை
தோன்றிவளர்
மறைவழி தேர்நறை ஆர்தாடு குழ்கொங்கு
மண்டலமே,
(க-ரை)

என்ற வரிகள் வருகின்றன. இதன் பொருள், நிறைந்த வெள்ளமுற்ற ஆற்றினை அடுத்த காந்தபுரத்தை ஆளும் வேந்தன், பெண் கருப்ப வேதனையுற்றுக் கருவுயிர்த்தற்கியலாது துன்புறுவதைக் கண்டு வயிற்றைப் பீறிக் குழந்தையை எடுத்துச் சந்தோஷமுறச் செய்த மருத்துவி பிறந்து வளர்ந்த நறையூர் நாடு சூழ்ந்தது கொங்குமண்டலம் மாகும்.

செழிபுற்ற காந்தபுரத்தை ஆண்ட கொங்கு மன்னனின் மகள் கருவுற்று, பேறுகாலம் நெருங்கியது. மகப்பெறு வயிற்றுவலி கண்டது போது, குழந்தையின் தலை திரும்பிவிட்டது. இதனால் அந்த இளவரசி பெருந் துன்பத்திற்கு ஆளானாள். குழந்தையின் தலையும் பெரிதாக இருந்ததால் வெளியே வராது என அறிந்தனர்.

அரசன் உடனே, தன் மகளையும், பேரக் குழந்தையையும் காத்து பிரசவ மருத்துவம் பார்ப்போருக்கு வேண்டிய பரிசளிப்பேன் என்று அறிவித்தார்.

இதனை மங்கலை எனும் மருத்துவச்சிக்கு செய்தி அறிவித்தனர். அவள், பிரசவத்தின் போதும், இறக்கும் தாய்மார்களின் வரையில் உள்ள குழந்தையைக் கீறி வெளியே எடுத்து பழக்கப்பட்டவள். ஏனெனில் பிரசவத்தின் போது தாய் சேய் இருவரும் இறந்தால், குழந்தையை வெளியே எடுத்துப் புதைப்பது தான் வழக்கம்.

மன்னனிடம் வந்து, நிலையை விளக்கி, அடிவயிற்றைப் பீறி வழி கண்டு சிசுவை எடுத்து ஈருயிர்களையும் வாழ்விக்கிறேன், என்றாள். அவர்கள் கடைசியில் சம்மதித்தார்கள். இம்மருத்துவச்சி, பிரசவ வேதனைப்படும் (ராஜகுமாரியைப் பக்குவமாகக் கிடத்தி, சிறிது நேரத்தில் அடிவயிற்றைக் கீறிக் குழந்தையை எடுத்துக்கொடுத்து பீறியவாயை மூடித்தன்னிடத்துள்ள மருந்தைத் தடவினாள். மற்று ஏற்ற சிகிச்சை செய்ய அரசமங்கை நினைவுற்றாள். அரசன் மகிழ்ந்து காங்கேய நாட்டில் மங்கலைப்பட்டி என்னும் ஊரை: இறையிலியாகக் கொடுத்தான் என்பார்கள். மருத்துவச்சியை நறையூர் நாட்டைச் சேர்ந்தவள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. தாராபுரமுஞ் சில ஊர்களுஞ் சூழ்ந்த பாகத்தை நறையூர் நாடு என்று வழங்கி வந்திருக்கிறார்கள்.

# கோட்டாறின் கதை - நூல் அறிமுகம்

## வித்யா இலட்சுமி




இந்த வருடம் புத்தகக் கண்காட்சிக்குச் சென்றபோது சுதர்ஷன் புக்ஸ் , வெளியிட்டுள்ள கோட்டாறின் கதை புத்தகம் வாங்கி இருந்தோம். ஒரு நகரத்தின் வளர்ச்சியைக் குறித்த புத்தகம் என்பது என் கவனத்தை ஈர்த்தது. பெரும்பாலும் சென்னை, தஞ்சாவூர், மதுரை, திருச்சி போன்ற நகரங்களின் வளர்ச்சியும், ஆங்கிலேயர் காலகட்டத்தில் அது அடைந்த பொருளாதார ரீதியான மாற்றங்களும், அதன் பொருட்டு நகரம் எல்லைகள் விரிவாக்கம், சந்தை, வர்த்தக வளர்ச்சி போன்றவற்றைப் பற்றியே நாம் அறிந்திருக்கிறோம். ஆனால் இது கன்னியாகுமரி மாவட்டத்தில் பெரிதும் வெளி உலகத்திற்கு அறியப்படாத ஓர் இடத்தின் ஆவணமாக இருக்கிறது. புத்தகம் வாசிக்கும் போதும் அந்த ஊரின் நகரக் கட்டமைப்பு, அதன் வளர்ச்சி, அதன் மாற்றங்கள், ஆங்கிலேயர் கால கட்டத்தில் அந்த சந்தைக்கு ஏற்பட்ட மாற்றங்கள் போன்றவற்றைப் படிக்க சுவாரசியமாக உள்ளது.

நம் நாட்டின் ஒவ்வொரு சிறிய, பெரிய ஊர்களுக்குப் பின்னாலும் பல வரலாற்றுத் தகவல்களும், கலாச்சார, வர்த்தக, பொருளாதார ரீதியான புரிதல்களும் தேவைப்படுகின்றது என்பதை ஆழமாகப் பதிவு செய்திருக்கும் ஒரு ஆவணம் இது. அந்த நகரைப் பற்றி மட்டுமல்லாது அது சார்ந்து அருகில் இருக்கும் ஊர்களையும், ஒரு நகரம் இயங்க அதில் எத்தனை அடுக்குகள் தேவைப்படுகின்றது என்பதையும் நாம் புரிந்து கொள்ள முடிகிறது.

நகர உருவாக்கலும் வளர்ச்சியும் குறித்து ஒரு ஆய்வு நூலாகத் தமிழில் வெளிவந்திருக்கும் புத்தகம். திரு மனுவேல் அவர்களின் 15 ஆண்டுக்கால ஆராய்ச்சியின் வடிவமாக இந்த புத்தகத்தை நாம் காண முடிகிறது. கிட்டத்தட்ட 2000 ஆண்டு வரலாற்றைத் தொகுத்து அதன் வளர்ச்சியை ஆவணப்படுத்தி இருக்கிறார்.

வெளிநாட்டுப் பயணிகள் குறிப்புகளில் ஆரம்பித்து, தற்காலம் வரை இவ்வூரின் வளர்ச்சியை நாம் புரிந்து கொள்ளும் வகையில் புத்தகம் எழுதப்பட்டிருக்கிறது. பிற நாட்டு அறிஞர்கள் இவ்வூரை என்னென்ன பெயர்களில் குறிப்பிட்டார்கள், இங்கு எந்த மாதிரியான இடங்கள் இருந்தது, இதன் வளர்ச்சிக்கான காரணமாகத் துறைமுகங்கள் எவ்வாறு செயல்பட்டன, இங்கு வர்த்தகம் தழைக்கும் வகையில் இதன் அமைப்பு இருந்ததற்கான சான்றுகள் என "*Metropolis*" என அழைக்கப்படுகிற பெரு நகரங்களின் வரிசையில் கோட்டாறு அமைந்ததற்கான தகவல்களைப் புத்தகம் பகிர்கிறது.

சந்தை, நகரத்தின் வளர்ச்சி எவ்வாறு ஒன்றுக்கொன்று தொடர்புடையதாக இருக்கிறது எனப் புரிந்து கொள்ள முடிகிறது. விவசாயமும், சந்தைப்படுத்துதலும் கோட்டாறு ஒரு வணிக நகரமாக வளர காரணமாக இருந்திருக்கிறது என்பதை




எடுத்துக் கூறுகிறது. சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற இலக்கியங்களில் கோட்டாறு ஆரம்பக் காலகட்டத்தில் எப்படி இருந்தது எனக் குறிப்புகள் உள்ளது.

ஐரோப்பியர் காலத்தில் கோட்டாறு ராணுவ முக்கியத்துவம் வாய்ந்த நகரமாக மாற்றம் பெற்றது. அதன் சந்தையும், நகர வளர்ச்சியும் விரிவடைந்து. நில வழி போக்குவரத்திற்காகப் பல சாலைகள் உருவாக்கப்பட்டன. இவற்றின் மூலமாகத் துறைமுகங்கள் இணைக்கப்பட்டு, வெளிநாடுகளுக்குப் பொருட்கள் ஏற்றுமதி செய்யப்பட்டது. துறைமுகம் வழியாகப் பல நாடுகளுக்கு வர்த்தகம் செய்யும் தகவலை பற்றி ஆவணப்படுத்தும் புத்தகம், கப்பலைப் பற்றியும் , கப்பல் கட்டும் விதத்தையும், அதற்குத் தேவையான பொருட்களும், கப்பல் வழியாக ஏற்றுமதி செய்யப்பட்ட பொருட்களின் பட்டியல்களையும், அது செல்லும் வழிகளில் இருந்த பிற துறைமுகங்களையும் விவரமாகச் சொல்கிறது.

டச்சு அரசாங்கம் திருவிதாங்கூரிலும், அதனைச் சுற்றி இருந்த கோட்டாறு போன்ற மையங்களிலும் வணிக ரீதியாகக் காலூன்றத் தொடங்கிய பொழுது அங்கு நடந்த அரசியல்,பொருளாதார, சமூக, கலாச்சார மாற்றங்களைப் பதிவு செய்கிறார் ஆசிரியர். இதன் வழியாக கொச்சி “அரபிக் கடலின் ராணி” எனவும் “தென்னிந்தியாவின் வாசல்” எனவும் சிறப்புப் பெயர் பெற்றது.

நகரம் ஆரம்பக் கட்ட வளர்ச்சியிலிருந்து நீண்ட காலமாக மக்கள் பயன்பாட்டில் இருப்பதற்குப் பல காரணங்களை ஆசிரியர் குறிப்பிடுகிறார். அதில் முக்கியமானதாக இடப்பெயர்ச்சி. வர்த்தகமும், சந்தைப்படுத்துதலும் கோட்டாறு உருவாவதற்கான காரணமாக இருந்தாலும், பிற்காலத்தில் தோன்றிய பல கோயில்கள் இங்கு நகரமயமாக்கம், குடியிருப்புகளும் அமைந்ததற்குக் காரணமாகக் கூறப்படுகிறது.

கோட்டாறு எனும் ஒரு இடத்தை எடுத்துக் கொண்டு அதைச் சார்ந்து நடந்த தொழில்கள், சந்தை, வர்த்தகம், மக்கள், அவர்களின் குடியிருப்பு,கோவில்கள், போக்குவரத்து அமைப்புகள், நிலவியல், இடப்பெயர்ச்சி , இலக்கியம், கல்வெட்டு, வெளிநாடுகளிலிருந்து பயணப்பட்டவர்களின் பார்வை எனப் பல விதமான தரவுகளை இந்த புத்தகம் வாசகர்களுக்கு அளிக்கிறது. முக்கியமாக இன்றைக்குப் பெருமளவில் வர்த்தக ரீதியில் அறியப்படாத ஓர் இடத்தை, வரலாற்று ரீதியில் நகரமாகவும், பெரு நகரமாகவும், *Metropolis* என அழைக்கப்பட்ட தரத்துடன் இருந்துள்ளது என்பதை அறிய வியப்பாக இருக்கிறது.

இவ்வாறு நாம் இழந்த ஒரு நகரத்தைத் தமது ஆய்வின் மூலமாக எழுத்துக்களின் வழியே மீட்டுருவாக்கம் செய்திருக்கிறார் ஆசிரியர். *Urbanization* என கூறப்படுகிற நகரமயமாக்கல் பற்றிய புரிதலும், அதன் அவசியமும், அது நிகழ்த்தும் வாழ்வியல் மாற்றங்களும், இந்தப் புத்தகத்தின் வழியே நம்மால் அறிந்து கொள்ள முடியும்.

# தமிழகத்தில் அயோத்தி இராமர்

## K. ஸ்ரீதரன்




திருமால் எடுத்த பத்து அவதாரங்களில் இராமவதாரம் மிகச்சிறப்புடன் போற்றப்படுகிறது 'நன்மையும் செல்வமும், நாளும் நல்குமே'' இராம வழிபாடு என கம்பர் பெருமான் போற்றுவதைக் காணலாம்.

இராமாயணம், மகாபாரதம் இரண்டு காப்பியங்களும் நமது பாரத சமுதாயத்தின் இரு கண்களாகத் திகழ்கின்றன.

மனிதன் எவ்வாறு வாழ வேண்டும் என்பதை எடுத்துக் காட்டுவது இராம அவதாரம். இத்தகைய சிறப்பு வாய்ந்த இராம காதை ஆன்மீகப் பெரியோர்களால் மீண்டும் மீண்டும் பக்திச் சொற்பொழிவுகளாக நடைபெற்று வருகின்றன.

**இராமாயணவிருத்தி**

பண்டை நாளில் திருக்கோயில்களில் இராமாயணமும் மகாபாரதமும் சொற்பொழிவுகளாகவும், விரிவுரைகளாகவும் நிகழ்த்தப்பட்டதைக் கல்வெட்டுச்சான்றுகள் கூறுகின்றன. ஸ்ரீவில்லிபுத்தூர் கோயிலில் காணப்படும் பாண்டியர் காலக் கல்வெட்டில் ஒர் ஊர் சேரனை வென்றான் சதுர்வேதி மங்கலம் என்ற பெயரால் அமைக்கப்பட்டது பற்றியும், இராமாயணம் விரிவுரை ஆற்ற (இராமாயண விருத்தியாக) நிலம் தானம் அளிக்கப்பட்டதைக் கூறுகிறது. காஞ்சிபுரம் அருகே உள்ள புள்ளலூர் கோயிலில் காணப்படும் கல்வெட்டில் இராமாயணம், பாரதம் புராணங்கள்



சொற்பொழிவு ஆற்ற நிலம் 'பாரத விருத்தியாக'' அளிக்கப்பட்டது. கோயிலின் பெயர்த் ''திரு அயோத்திப் பெருமாள் கோயில்'' என அழைக்கப்படுவது சிறப்பானது. சோழ மன்னர்களான முதலாம் இராஜாதிராஜனும் அவன் மகன் இரண்டாம் இராஜேந்திரன் காலத்தில் வெளியிடப்பட்ட 'திருவிந்தலூர் செப்பேட்டிலும் (ஏடு: எண்.83) மகாபாரதம், ஸ்ரீ இராமாயணம் உரையாற்ற நிலம் தானமளிக்கப்பட்ட செய்தி காணப்படுகிறது.

சக்கரவர்த்தித் திருமகன்

தமிழ்நாட்டில் திருக்கோயிலில் இராமர் வழிபாடு தொன்று தொட்டுச் சிறப்பாக இருந்ததற்கான சான்றுகள் உள்ளன. திருக்கோயில்களில் வழிபாட்டில் இருந்த திருமேனி, திரு அயோத்தி ஆழ்வார், ராகவச் சக்கரவர்த்தி, கருணாகரன், சக்கரவர்த்தித் திருமகன் என்றெல்லாம் போற்றி அழைக்கப்பட்டதைக் காண்கிறோம்.

திருநெல்வேலி மாவட்டம் விஜயாநாராயணம், புள்ளலூர், ஆலங்குடி, சிறுதாவூர், எண்ணாயிரம், வடமதுரை, பிரம்ம தேசம், சேரன்மாதேவி, ஸ்ரீவில்லிபுத்தூர், திருக்கோவிலூர், படவேடு, நெடுங்குணம், கும்பகோணம், இராமசாமி கோயில் போன்ற பல கோயில்களில் இராமபிரான் வழிபாடு சிறப்பாக நடைபெற்றதை அறிய முடிகிறது..

**அயோத்தி ஆழ்வார்**

காஞ்சிபுரம் அருகே உள்ள உத்திரமேரூர் கோயிலில் பார்த்திவேந்திரவர்மன் தேவியருள் ஒருத்தியான வில்லவன் மாதேவி ராமபிரானுக்கு ஒரு கோயில் இங்கு எடுத்தாள். அக்கோயில் 'ஸ்ரீ அயோத்தி பெருமான் கோயில்'' என அழைக்கப்பட்டது. மேலும் இக்கோயிலில் திருவிழாவில் உலா வருவதற்காக ஸ்ரீராமருடைய உற்சவத் திருமேனியும் செய்து வைத்தாள் எனக் கல்வெட்டுகள் கூறுகின்றன.

'ஏரிகாத்த இராமர் கோயில்'' - மதுராந்தகம்

இராவணன் மறைவுக்குப் பின்னர் சக்ரவர்த்தி திருமகனாகிய இராமபிரான் அயோத்திக்குச் செல்லும் வழியில் மதுராந்தகம் தலத்தில் விபண்டக முனிவருக்கு காட்சி கொடுத்ததாக புராண வரலாறு கூறுகிறது. அவ்வாறு வரும் பொழுது சீதா பிராட்டியின் இடது கையினைத் தனது வலது கையால் பற்றியவாறு திருக்கல்யாணக் கோலத்தில் காட்சி தரும்; திருமேனிகளை கண்டு வழிபடலாம். எங்கும்



காண இயலாத் திருமேனிகள் இக்கோயிலில் எழுத்தருளி அருள்புரியும் இராமபிரானை 'அயோத்திய பெருமான்'', 'திரு அயோத்தி கருணாகரப் பெருமாள்'' என கல்வெட்டுகள் அழைப்பதையும் காணலாம்.

சென்னை நகருக்கு அருகே அமைந்துள்ள திருநீர்மலையில் இராமாயணத்தை எழுதிய வால்மீகி முனிவருக்கு, நீர்வண்ணப்பெருமான் கல்யாணராமனாக காட்சி கொடுத்ததாகக் கூறப்படுகிறது. மணப்பெண்ணாகச் சீதை வலப்புறமும் இலக்குவன் அவருக்கு இடதுபுறமும் எழுந்தருளியுள்ளதைக் கண்டு மகிழலாம். கல்யாணராமர் திருக்கோயில் என்பதால் ஆஞ்சநேயர் இச்சன்னிதியில் இடம் பெறவில்லை.

தஞ்சாவூர் அருகே உள்ள வடுவூர் இராமர் கோயில் 'தட்சிண அயோத்தி'' என்றே சிறப்பித்துப் போற்றப்படுகிறது. வடமதுரை, ஸ்ரீவில்லிபுத்தூர் கோயில்களில் இராமனுக்காக எடுக்கப்பட்ட சன்னிதிகளில் வழிப்பாட்டில் இருக்கும் திருமேனிகள், 'திரு அயோத்;தி சக்கரவர்த்தி, 'திரு அயோத்தி விண்ணகர் ஆழ்வார்'' என்றே கல்வெட்டுகள் சிறப்பாகக் குறிப்பிடுகின்றன.

தமிழகத் திருக்கோயில்களில் இராமகாதை ஓவியங்களாகவும், அழகிய சிற்பங்களாகவும் வடிவமைக்கப்பட்டுள்ளதைக் காண முடிகிறது. அறமே வடிவான இராமனின் வடிவழகினை அழகிய செப்புத் திருமேனிகளாக வடிக்கப்பெற்று கோயில்களில் வழிபடப்படுவதைக் காண்கிறோம்.

இராமாயணச் சிற்பங்கள்

முற்காலச் சோழர்கால கோயில்களில் அதிட்டானப் பகுதியில் இராமாயணத்தில் வரும் நிகழ்ச்சிகளைச் சிறுசிறு சிற்பங்களாக அமைக்கும் பழக்கத்தைக் காண்கிறோம். தஞ்சை அருகே உள்ள புள்ளமங்கை, குடந்தை நாகேசுவரசுவாமி கோயில், திருச்சி அருகே லால்குடி, கோபுரப்பட்டி கோயில் போன்ற பல திருக்கோயில்களில் இராமகாதையில் வரும் நிகழ்ச்சிகள் சிறுசிறு சிற்பங்களாக வடிவமைக்கப்பட்டுள்ளன.

முதலாம் ஆதித்த சோழனுக்கு ''கோதண்டராமன்'' என்ற சிறப்புப் பெயர் உண்டு. அதிக அளவில் இவர் கட்டியது சிவாலயங்கள் என்றாலும், அவருடைய ஆலயங்களில் இராம காதையின் நிகழ்ச்சிகள் சிறுசிறு சிற்பங்களாக இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

பிற்காலச் சோழர்காலக் கோயிலான குடந்தையை அடுத்துள்ள திரிபுவனம் கோயிலிலும் இராமாயணம் தொடர்பான சிற்பங்கள் காணப்படுகின்றன.

விஜயநகர, நாயக்கர் காலக் கோயில்களில் தூண்களில் இராமகாதை தொடர்பான சிற்பங்கள் அதிக அளவில் இடம்பெற்றுள்ளதைக் காணலாம். மதுராந்தகம், தில்லை விளாகம், வடுவூர், குடந்தை ராமசாமி கோயில், படவேடு, நெடுங்குணம், திருப்புட்குழி, திருப்புல்லாணி போன்ற பல கோயில்கள் 'இராமர் கோயில்'' என்ற தனிச்சிறப்புடன் போற்றி வணங்கப்படுகின்றன.

மன்னர்கள் ஈடுபாடு

தமிழகத்தை ஆண்ட மன்னர்களும் இராம அவதாரத்தின் மீது மிகுந்த ஈடுபாடு கொண்டவர்களாக விளங்கியிருக்கின்றனர். பாண்டிய மன்னன் சுந்தரபாண்டியன் இலங்கை நகரைக் கைப்பற்றியதைக் குறிப்பிடும்பொழுது 'இலங்காபுரி தகனம் செய்த ஸ்ரீஇராமன்' எனத் தன்னைப் புகழ்ந்து கூறிக் கொள்வதைக் காணலாம்.

தஞ்சையை ஆட்சி செய்த ரகுநாத நாயக்கர் அறத்தின் மூர்த்தியான இராமனது கதையை எப்பொழுதும் கேட்டு மகிழ்ச்சி அடைவாராம்.

அதனால் ';அந வரத ராம கதாம்ருத சேவகன்'' என்று



தன்னைப் பெருமையுடன் கூறிக்கொள்வதைக் காணலாம். திருக்கண்ணமங்கை கோயிலில் அவர் பல திருப்பணிகளைச் செய்துள்ளார். இராமநவமி அன்றுஅத்திருக்கோயிலுக்கு வந்து வழிபாடு செய்து தானங்கள் அளித்ததைத் திருக்கண்ணமங்கை செப்பேடு கூறுகிறது. செப்பேட்டின் இறுதியில் தெலுங்கில் "ஸ்ரீராம நிவேகதி" என்றும், 'ஸ்ரீராம ஜெயம்' என்றும் பொறிக்கப்பட்டுள்ளது சிறப்பாகும்.

குடந்தையில் உள்ள இராமசாமி கோயில் அற்புத கலைப்படைப்பாய் விளங்குகிறது. கோயிலின் கருவறையில் இராமன் சீதைதேவியுடன் அமர்ந்திருக்க அருகில் பணிவே உருவமாக நிற்கும் இலக்குவனும், கொற்றக்குடை ஏந்தி நிற்கும் பரதனும், வெண்கவரி வீசும் சத்ருகணன் மற்றும் இராமன் முன்பு சொல்லில் வல்லானாகிய அனுமன் ஓலைச்சுவடி ஏந்தி யாழ் இசைக் கருவியைக் கொண்டு இராமகாதையின் சிறப்பைக் கூறும் அரிய பட்டாபிஷேகக் காட்சியைக் கண்டு வணங்கி மகிழலாம். இக்கோயில் தூண்களில் சுக்ரீவ பட்டாபிஷேகம், வீடணன் பட்டாபிஷேகம் போன்ற நிகழ்ச்சிகள் அரிய சிற்பங்களாகக் காட்சி தருகின்றன.

திருவரங்கம் கோயில்

திருவரங்கம் கோயில் இராமரே வழிபட்ட திருக்கோயில் என்ற சிறப்புடன் விளங்குகிறது. இத்திருக்கோயிலில் இராமருக்கு என்று பல சன்னிதிகளும், தூண்களில் இராமாயணம் தொடர்பான நிகழ்ச்சிகள் சிற்பங்களாக விளங்குவதைக் கண்டு மகிழலாம்.

இராம காதை - ஓவியங்களில்

தமிழகத் திருக்கோயில்களில் பலவற்றில் இராமகாதையின் நிகழ்ச்சிகளை எடுத்துக்கூறும் ஓவியங்கள் காணப்படுகின்றன. இராமநாதபுரம் இராமலிங்கவிலாசம், தர்மபுரி அருகே அதியமான் கோட்டை, திருச்சி அருகில் திருவெள்ளறை, ஸ்ரீரங்கம், அழகர் கோயில் வசந்தமண்டபம், புதுக்கோட்டை திருகோகர்ணம் கோயில், குடந்தை அருகே குறிச்சி பெருமாள் கோயில் உடையார்பாளையம் பெருமாள் கோயில் போன்ற பல கோயில்களில், இராமாயண ஓவியங்கள் காணப்படுகின்றன.

செங்கம் வேணுகோபால பார்த்தசாரதி கோயில் மண்டபத்தில் தெலுங்கு இராமாயணமான, 'ரங்கநாத இராமாயணம்" அழகிய ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளதைக் கண்டு மகிழலாம்.

சிற்பங்கள் - திருமேனிகள்

திருக்கோயில்கள் பலவற்றில் நுழைவாயில்



மரக்கதவுகளிலும், தேர்ச் சிற்பங்களிலும் இராம காதையின் நிகழ்ச்சிகள் இடம்பெற்று விளங்குவதைக் காணலாம். திருச்சேறை, பருத்தியூர், வடக்குப்பனையூர், தில்லைவிளாகம் போன்ற ஊர்களுக்குப் பெருமை அளிக்கும் இராமர் செப்புத்திருமேனிகள் தமிழகக் கலைச்சிறப்புக்கும், இராமர் வழிபாட்டில் கொண்டிருந்த ஈடுபாட்டிற்கும் சிறந்த எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றன.

பண்டைய மன்னர்கள் வெளியிட்ட காசுகளிலும் இராமருடைய வடிவங்கள் இடம்பெற்று விளங்குகின்றன.

அயோத்தி இராமனது வரலாற்றுச் சிறப்பினைக் கம்பர் பெருமான் தான் இயற்றிய கம்ப இராமாயணத்தைத் திருவரங்கம் கோயிலில் தாயார் சந்நிதி எதிதுரே உள்ள நான்கு கால் மண்டபத்தில் அரங்கேற்றினார் எனக் கூறப்படுகிறது. இம்மண்டபம் ‘கம்பர் மண்டபம்” என்றே அழைக்கப்படுகிறது. அம்மண்டபத்தின் அருகே வைணவ ஆச்சாரியார்களில் ஒருவரான ‘பெரிய வாச்சான்பிள்ளை” இயற்றிய திவ்யப்பிரபந்த பாசுரப்படி இராமாயணம் மிகச் சிறப்பானது. நூலாயிர திவ்ய பிரபந்த பாடல்களில் வரும் சொற்களை மட்டுமே தொகுத்து எழுதிய பாசுரப்படி இராமாயணம் பாராயணம் செய்ய மிகவும் எளிமையானது. அனைவராலும் போற்றப்படும் புகழ்பெற்று விளங்குகிறது.

அறத்தின் வடிவாகத் தோன்றி, மனிதச் சமுதாயத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்கிய இராம அவதாரத்தின் பெருமையை எடுத்துக் கூறும் இராம காதை தமிழகத் திருக்கோயில்களில் சிறப்பிடம் பெற்று விளங்குகின்றன என்றால் மிகையில்லை.

# சரித்திரத் தேடலுக்கு உதவிய சரித்திர நாவல்கள்

## காஞ்சி. ரேவஜி

பொதுவாக படித்தல் என்பது எல்லா வயதினரும் செய்யும் ஒரு செயல். நாம் எதை படிக்கிறோம், எப்படி படிக்கிறோம், செயலாற்றுகிறோமா? அல்லது வெறுமனே படித்துவிட்டு சென்று விடுகிறோமா என்பதில் தான் படித்தலின் தாத்பரியம் ஒளிந்திருக்கிறது.

படித்தல் ஒரு விளைச்சல். நம் மனதை கரைக்கும் குடும்ப நாவல்கள் படியுங்கள், அது உங்கள் குணத்தை வளர்க்கும் . சமூக நாவல்கள் படியுங்கள், அது உங்கள் சமூக சிந்தனைகளை பெருக்கும். கவிதை நூல்களை படியுங்கள், அது உங்கள் கற்பனை தேடனை அவிழ்க்கும். திகில் நூல்களை படியுங்கள், அது உங்கள் பயத்தை ஓட்டும். ஆன்றோர்கள், சான்றோர்கள், அறிஞர்கள், கலைஞர்கள், பெருந்தலைவர்களை பற்றி படியுங்கள், அது உங்கள் கொள்கைகளை வலுப்படுத்தும். சரித்திர நாவல்களை படியுங்கள், அது உங்களை மட்டுமல்லாது உங்கள் சந்ததியினரிடமும் பாரம்பரியத்தையும், கலாச்சாரத்தையும், தமிழனின் நாகரிகத்தையும் கொண்டு சேர்க்கும். எவ்வளவுதான் நவீன வசதிகள் வந்தாலும் புத்தகத்திடம் அனைத்து விஷயங்களும் தோற்று தான் போகின்றன.

நீங்கள் சொல்லலாம் ஏன் அலைபேசியிலேயே எல்லாம் இருக்கிறது, பிறகு நான் ஏன் புத்தகம் படிக்க வேண்டும் என்று. அந்த அலைபேசியில் நீங்கள் பார்க்கும் தகவல்கள் அனைத்தும் ஏதோ ஒரு புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டவை தான் என்பதை மறந்து விடாதீர்கள். சிறிய உதாரணம் சொல்கிறேன் ஒருநாள் நீங்கள் வீட்டில் தனிமையில் இருக்கிறீர்கள், மின்சாரமும் இல்லை, அலைபேசியும் இல்லை, அட வெளியில் செல்லலாம் என்றால் இருசக்கர வாகனமும் இல்லை, நடந்து செல்லலாம் என்றால் வெயில் வாட்டியெடுக்கிறது. உணவும் தயாராகவில்லை! என்னதான் செய்வது பத்து வேண்டாம் ஐந்து நிமிடம் சும்மா இருக்க முடியுமா? முடியாது. தூக்கம் கூட வரவில்லை! என்ன செய்வது? அப்போது உங்கள் கைகள் தானாகவே உங்களை புத்தக அலமாரி கேட்டுச் செல்லும்! இது முற்றிலும் உண்மை. ஏதோ ஒரு செய்தித்தாள், புத்தகம் அல்லது உங்கள் குழந்தையின் புத்தகமாக கூட இருக்கலாம். தனிமை நேரம் என்பது அவ்வளவு கொடுமையானது. அப்படி ஒரு நேரம் இருந்தால் புத்தகம் படியுங்கள்!



ஆனால் அப்படி ஒரு நேரத்தை நீங்களே உருவாக்கிக் கொள்ளலாம். ஏன் என்று கேட்கிறீர்களா ஏனெனில் புத்தகம் படித்தல் உங்களுக்கு மட்டுமல்ல உங்கள் குடும்பத்தில் உள்ள அனைவருக்கும் நன்மை பயக்கும். அப்படி நீங்கள் படிக்கும் நாவல் சரித்திர நாவலாக இருக்கும் பட்சத்தில் உங்களுக்கு பல அரிய தகவல்கள் கிடைக்க வழி உண்டு. பொதுவாக தமிழ் சரித்திர நாவல்கள் மிக அதிகம். சரித்திர நாவலாசிரியர்களும் அதிகம்! அதற்கு காரணம் வாசகர்களின் ரசனையும், கால மாற்றங்களும் தான்! நம் தமிழ் சரித்திர நாவல்களில் தமிழனின் பாரம்பரியம், கலாச்சாரம், மொழி வளமை, கொடை, புலமை, பாரம்பரிய உணவு, அணிகலன்கள், கடல் கடந்த வாணிகம், கலை, போர் படை, போர் திட்டங்கள், தமிழ் , கோவில்கள், மக்களின் வாழ்க்கை



நெறிமுறைகள், மன்னர்களின் அரசியல் வாழ்க்கை, இறை பக்தி என பலவற்றை எடுத்துக் கூறுகின்றன.

நாம் சேரர், சோழர், பாண்டியர், பல்லவர் இன்னும் பல அரசர்களைப் பற்றிய பெயர்களை மட்டுமே கேட்டிருக்கிறோம். ஆனால் இவர்களைப் பற்றிய கல்வெட்டுகளை எல்லோராலும் சென்று காண முடியாது. ஓலைச்சுவடிகளில் உள்ள எழுத்துக்களை படித்து பொருட்களை கூற முடியாது. கோவில்களில் உள்ள கல்வெட்டுகளுக்கு அர்த்தம் கூற முடியாது. இவற்றை நாம் சரித்திர நாவல்களில் காண முடியும்! இதற்கு பெரிதும் துணை நிற்பது நமது தொல்லியல் மற்றும் அகழ்வாராய்ச்சி துறை ஆய்வாளர்கள். அவர்களின் ஆய்வுகளை, அதன் முடிவுகளை பயன்படுத்தி, நமது கற்பனை திறனையும் இணைத்து சரித்திர நாவல்களை படைக்கிறார்கள் சரித்திர நாவலாசிரியர்கள்.

திரு,கல்கி அவர்கள் எழுதிய பொன்னியின் செல்வன் சரித்திர நாவல் வரலாற்றிலேயே பெரும் சாதனை படைத்த நூலாகும். வாசகர்களுக்கு சரித்திர வாசனையை காண்பித்தது அந்த நூல் தான் என கூறலாம். அதன்பிறகு திரு சாண்டில்யன், திரு.பாலகுமாரன் போன்றோரும் சரித்திர நாவல்களை படைத்துள்ளனர். பொன்னியின் செல்வன், சிவகாமி சபதம், கடல் புறா, பார்த்திபன் கனவு, உடையார், கங்கைகொண்ட சோழன், நந்திபுரத்து நாயகி, என்று இன்னும் சொல்லிக் கொண்டே போகலாம். அவ்வளவு சரித்திர நாவல்கள் நமக்கு படிக்க கிடைக்கின்றன.

நாம் அனைவரும் பள்ளி கல்லூரி படிப்பை முடித்து வேலைக்கு செல்லும் காலகட்டத்தில் தான் சில ஓய்வு கிடைக்கிறது. அப்படியான ஓய்வு நேரங்களில் சரித்திர நாவல்கள் படிப்பதை பழக்கப்படுத்திக் கொள்ளுங்கள். ஏனென்றால் அது உங்களுக்கு நிறைய வரலாற்று தகவல்களை அளிக்கும்.

வரலாற்றுப் புதினங்கள் போர்க்களங்கள் எவ்வளவு கொடுமையானது என்பதையும், விவசாயத்தின் முக்கியத்துவம், விவசாய குறிப்புகளும், சாஸ்திரங்கள், பழமொழிகளின் அர்த்தங்களையும், அரசர்களின் ராஜதந்திரங்களையும், ஆண் மகனின் வீரமும், தமிழச்சியின்





நாட்டுப் பற்றும், போர் திட்டங்கள், கவிதைகள், கற்பனைகள், போர்ப்படைகளின் வகைகள்,கடல் கடந்த வணிகம், புலவர்களின் வாழ்க்கை, கோவில் திருப்பணிகள் போன்றவற்றை தெரிந்து கொள்ள வழி வகுக்கும். உங்களுக்கு உதவ பல நூலகங்களும் உங்களுக்கு அருகிலேயே உள்ளது. அவற்றை தேடிச் செல்லுங்கள். அதற்கான ஆர்வம் மட்டுமே நமக்கு தேவை.

இவ்வளவு பேசுகிறீர்களே சரித்திர நாவல் படிப்பதால் என்ன நன்மை என்று கூறுங்கள் என்று கேட்கிறீர்கள்! உங்கள் குழந்தைகளுக்கு கதை சொல்வதற்கு இவை பெரிதும் பயன்படும்.இப்பொழுதெல்லாம் என்ன கதை சொல்கிறீர்கள்? கண்டிப்பாக பாட்டி வடை சுட்ட கதையை சொல்லிவிட்டு அவர்கள் வேறு கதை சொல்லுங்கள் என்று கூறுவார்கள், அப்போது என்ன சொல்வது என்று தெரியாமல் நாம் இருப்போம்!

நாங்கள் வேலைக்கு செல்வதால் கதை சொல்லும் அளவிற்கு எங்களுக்கு நேரமில்லை என்கிறீர்களா! உங்களுக்கு வயதான பிறகு உங்கள் பேரன், பேத்திகளுக்கு கதை சொல்லலாம். இந்த கதைகளின் மூலம் அவர்களுக்கு தமிழனின் பெருமைகளை கதையாக சொல்லுங்கள் . பிறகு பாருங்கள் அவர்கள் உங்களை விடவே மாட்டார்கள் இதை விடவா ஒரு நன்மை இருக்கிறது.

திடீரென்று சரித்திர நாவல் படியுங்கள் என்று கூறுகிறீர்கள்! பத்தாவது முடித்ததுமே வரலாற்று புத்தகத்தை மூட்டை கட்டி வைத்து விட்டோமே, என்ன செய்வது? நூலகத்திற்கு செல்வதற்கு நேரம் இல்லை என்று நீங்கள் கையை பிசைவது எனக்கு தெரிகிறது. அலைபேசி இருக்கிறது கூகுளில் தமிழ் சரித்திர நாவல்கள் என்ற தலைப்பை கொடுத்தாலே பல நாவல்கள் உங்கள் கையில். நம்மில் எத்தனை பேர் விக்ரமாதித்தன் வேதாளம், அக்பர் பீர்பால் , தெனாலிராமன் கதைகள் நம் பிள்ளைகளுக்கு சொல்லி இருப்போம். இனியாவது சரித்திர நாவல்களை நம் பிள்ளைகளுக்குச் சொல்லுவோம். அதேபோலவே பல தலங்களில் சரித்திர நாவல்கள் ஒளி கதையாகவும் கிடைக்கிறது. அதையும் நீங்கள் கேட்டு கதையை அறிந்து கொள்ளலாம். நம் பாரம்பரிய விளையாட்டுகளை பிள்ளைகளை விளையாட வைப்போம். இன்றைய தலைமுறை

"அலைபேசியில் விளையாடி
கணினியில் கரைந்து
துரித உணவில் பெருத்து
பொருந்தா உடையில் பொசுங்குகிறார்கள் " அவர்களை
தெருவில் விளையாட விட்டு புத்தகங்களில் கரைத்து
பாரம்பரிய உணவில் திளைத்து
பருத்தி உடையில் பளபளக்க வைப்பது"

பெற்றோராகிய உங்கள் கையில் உள்ளது. எவ்வளவுதான் பணம் இருந்தாலும், நல்ல பழக்க வழக்கங்களை பெற்றோர் மட்டுமே உருவாக்க முடியும். அது போல எத்தனை புத்தகங்கள் இருந்தாலும் நம் வரலாற்றை அறிந்து கொள்ள நம்மை தூண்டும் சரித்திர நாவல்களின் மூலம் நமது தமிழர்களின் பண்டைய கலாச்சாரத்தையும் நாகரீகத்தையும் அறிந்து கொள்ள முடியும்.

சரித்திர நாவல்கள் படிப்போம், புதிய சரித்திரம் படைப்போம்.

